# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



**கண்ணனைத் தேடி...**

- வேளுக்குடி க்ருஷ்ணன்
தொடர் ஆரம்பம்

KALKI 27.04.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

## "இன்னொரு அமீரை உருவாக்குங்கள்!"

# An umbrella of protective insurance options.

CREDIT CARD INSURANCE *

AIR TRAVEL INSURANCE **

PERSONAL ACCIDENT INSURANCE ***

HOME LOAN INSURANCE

HEALTH INSURANCE

DOMESTIC TRAVEL INSURANCE

EDUCATIONAL LOAN INSURANCE

* FREE cover for
Death / Accident / Lost card misuse.

** FREE for our
Star Diamond Savings Account customers.

*** FREE accident cover
for Home Loan borrowers.

Other special risk covers also available
at concessional rates.




*Relationships beyond banking*

Visit us at www.bankofindia.co.in

* Conditions apply. Insurance is the subject matter of solicitation

# கல்கி

ஸ்ரீரஸ்தா...ஸ்மாடா...ஸ்மார்ட்டா...

27.4.2008


## கண்ணனைத் தேடி...





வேளுக்குடி க்ருஷ்ணன் தொடர் ஆரம்பம்

## "இன்னொரு அமீரை உருவாக்குங்கள்"





விவரம் தெரிந்த நாள் முதல் 'அலை ஓசை', 'பொன்னியின் செல்வன்', 'பார்த்திபன் கனவு', 'சிவகாமியின் சபதம்', 'மலைச்சாரல் மாதவி', 'வேங்கையின் மைந்தன்' என்று அருமையான வரலாற்றுத் தொடர்களை கல்கியில் படித்து ரசித்தவள். தற்போது கல்கியில் சிறுகதைகள் குறைவாக இருக்கின்றன. போதவில்லை. தமிழில் எழுத்தாளர் பஞ்சமா? கல்கி விலையைக் கூட்டினாலும், பக்கங்களைக் கூட்டி கதைகள் போடுங்கள். கல்கி தரம் அக்மார்க்.

**- அழகு லட்சுமி, திருவில்லிபுத்தூர்**

கல்கி புதுவிதமாக பக்கத்துக்குப் பக்கம் புதுச் செய்திகளாகத் தருகிறது. நிச்சயம் கல்கியின் வட்டம் இன்னும் இன்னும் விரிவடையும்.

**- கொசேரி ஆர்.காளிதாஸ், சென்னை**

புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமியின் 'மனசெல்லாம் மண் வாசம்', வித்யாசமான தொடர். கலை வாசமும் கலந்து திகட்டாமல் இனிக்கிறது.

**- வானவில் மூர்த்தி, கூத்தப்பாக்கம்**

வார்த்தை விளையாட்டில் அசத்தி விட்டார்கள் மண்ணச்சநல்லூர் சிதம்பரம் பிள்ளை மகளிர் கல்லூரி மாணவிகள். சூப்பர்.

**- ஜே.துரைராஜ், சென்னை - 116**

# திகட்டாத மண் வாசம்

குடும்பத்தினர் அனைவரும் படிக்கும் வகையில் நல்ல தரமான செய்திகளை 'கல்கி' வெளியிடும்பொழுது, விலையேற்றம் பொருட்படுத்தக் கூடியதல்ல. தொடரும் எமது கல்கி படிக்கும் பயணம்.

**- எஸ்.உஷா சங்கர், சென்னை - 44**

ஆறு வார குஜராத் ரிப்போர்ட் அறுசுவையுடன் அமைந்திருந்தது. அனைத்து தரப்பு மக்களையும் திருப்தி செய்வதென்பது இயலாத செயல். ஆனால், மோடி தம் நிர்வாகத்தால் பாஸ்மார்க் வாங்கிவிட்டார்.

**- ஆர்.நாகராஜன், சென்னை - 117**

வாரிக அரசியல் பற்றிய கேள்விக்கு மோடி கூறிய பதில் (தன் குடும்பத்தினராக ஐந்தரை கோடி மக்களை குறிப்பிட்டது) சூப்பர். திரும்பத் திரும்ப மக்கள் அவரைத் தேர்ந்தெடுப்பதன் அர்த்தம் புரிந்தது.

**- மன்னை சதிரா, மன்னை**

## ஸ்பீட் போஸ்ட்

மதச் சார்பின்மை குறித்த மோடியின் விளக்கம் அருமை. மேலும் குஜராத் முழுவதையும் தன் குடும்பம் எனக் கூறும் மோடி, குஜராத்தின் நலனுக்குப் பல்லாண்டு காலம் உழைக்கட்டும்

**- கொ.மூர்த்தி, குட்டலாடம்பட்டி**

குஜராத் முதல்வர் நரேந்திர மோடியின் அதிரடி பேட்டி மற்றும் முன்பக்க அவரின் அட்டைப் படம் அனைத்தும் அமர்க்களமாய் ஜொலித்தன!

**- ஏ.பி.எஸ். ரவீந்திரன், நாகர்கோவில்**



ஒகேனக்கல் விவகாரத்தில் தமிழக முதல்வர் நிதானம் காக்க வேண்டும் என்று தலையங்கத்தில் சொல்லியிருக்கிறீர்கள். நியாயத்தைச் சிந்திக்க மறுக்கும் கர்நாடகக்காரர்களுக்காக, அத்தியாவசிய குடிநீர்த்திட்டத்தை நிறைவேற்றும் பணியைத் தள்ளிக்கொண்டே போவது சரியா?

- என்.பாலகிருஷ்ணன்,
மதுரை

சமீப காலமாக பெண் கருக்கொலை, பெண்கள் பிரச்னைகள் பற்றிய எழுத்துகளுக்கு விருது கிடைத்து வருவது நல்ல விஷயம். இதனை மெய்ப்பிக்கும் வகையில் அமைந்துள்ளது கல்கி, மங்கையர்மலர் விருது.

- ரிஸ்வானா, வாணியம்பாடி

13.4.08 கல்கியில் வெளியான 'அலங்கா நல்லூர்' சிறுகதை, ஒரு கதையே அல்ல. நெஞ்சைச் சுடும் உண்மை! மாணவர்களுக்கு தெளிவுரை!

- விஜயா ராஜன்,
பெங்களூரு




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
4343 8888, 2225 1522,
2225 0623, 2225 1324,

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 68 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



அருண்குமாரின் இந்த அதிரடியால் கோவை காங்கிரஸில் மட்டுமல்லாமல், தமிழக காங்கிரஸுக்குள்ளேயும் மீண்டும் புயலடிக்கத் துவங்கிவிட்டது. நீக்கப்பட்ட மூன்று பேரில் ஒருவர் சட்டமன்ற உறுப்பினரான கோவை தங்கம். ''அருண்குமார், மேலிடத்துக்குத் தெரியாமல் செய்த அதிகார துஷ்பிரயோகம் இது'' என்று மாபெரும் உண்ணாவிரத அறப்போரை கோவையில் நடத்திக் காட்டியிருக்கிறது வாசன் தரப்பு. 'தங்களது தன்மானம் பாதிக்கப்படுவது தொடருமேயானால், மீண்டும் தனியாக த.மா.கா.வைத் துவங்குவது குறித்துத் தயங்கக் கூடாது' என்று இந்தப் போராளிகள் பேசியது, டெல்லி வரை அதிர்வலைகளை ஏற்படுத்தியிருக்கிறது. இதற்கிடையில் மேலிடத்தை எதிர்த்து உண்ணாவிரதம் இருந்தவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று, தமிழ்நாட்டுக்கான கூடுதல் பொறுப்பாளர் கிருஷ்ணமூர்த்தி சொல்லியிருக்கிறார்.

# மீண்டும் த.மா.கா.?–

''தமிழக காங்கிரஸ் ஒற்றுமையாகச் செயல்பட்டால்தான் தமிழ்நாட்டில் மீண்டும் காங்கிரஸ் ஆட்சியைக் கொண்டு வர முடியும்'' என்று காரைக்குடியில் சோனியா சொல்லி வாய் மூடவில்லை... காங்கிரஸுக்குள் மீண்டும் மோதலும், முணுமுணுப்பும் துவங்கிவிட்டன. கோவை மாநகரம், வடக்கு, தெற்கு மாவட்டங்களில் மாவட்டத் தலைவர்களாக இருந்தவர்கள் வாசன் ஆதரவாளர்கள். காங்கிரஸ் மேலிடப் பார்வையாளர் அருண்குமார், இந்த மூவரையும் திடீரென்று நீக்கி, மாநகரம், புறநகரம் என்று இரண்டாகப் பிரித்து அவற்றுக்குப் புதிய தலைவர்களை நியமித்துவிட்டார். புதிதாக நியமிக்கப்பட்டவர்கள் நீலகிரி பாராளுமன்ற உறுப்பினரான பிரபுவின் ஆதரவாளர்கள்.



* ப.சிதம்பரம்

பிரச்னை எப்படித் துவங்கியது? தமிழ்நாடு காங்கிரஸை நிர்வாக வசதிக்காக 54 மாவட்டங்களாகப் பிரித்திருக்கிறார்கள். இதில் 27 மாவட்டங்களில் வாசன் தரப்பு முன்னாள் த.மா.கா.வினர் தலைவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் பெரும்பாலோர், கடந்த ஐந்தாண்டுகளுக்கு மேலாக பொறுப்பிலிருப்பவர்கள். காஞ்சிபுரம் மாவட்டத் தலைவர் சக்ரபாணி செட்டியார், பத்தாண்டுகளுக்கு மேலாக பொறுப்பில் இருக்கிறார். மற்ற மாவட்டங்களில் பல்வேறு கோஷ்டித் தலைவர்களின் ஆதரவாளர்கள் பதவி வகிக்கிறார்

கள். ஆனால், இவர்கள் அனைவரும், ஒருமித்துச் செயல்படும் சந்தர்ப்பம் மிகவும் குறைவு. மாறாக வாசன் தரப்பு தலைவர்கள், தங்கள் வளமான அரசியல் எதிர்காலத்துக்காக ஒருங்கிணைந்து செயல்படுபவர்கள். இவர்களது நலன்களை சோனியா வரை சொல்லி பாதுகாப்பவர் வாசன்.

'அருண்குமார் வாசன் ஆதரவாளர்களை நீக்குவதற்குப் பின்புலத்தில் இயங்கியவர் பிரபு' என்று புலம்புகிறது வாசன் தரப்பு. பிரபு ஏன் இதைச் செய்ய வேண்டும்? இப்போது நடந்து வரும் தொகுதி மறுசீரமைப்பில், நீலகிரி தொகுதி நீக்கப்பட இருக்கிறதாம். எனவே, பிரபு கோவையிலோ அல்லது பொள்ளாச்சியிலோதான் போட்டியிட வேண்டியிருக்கும். ஆனால், வாசன் தரப்பு தலைவர்கள் கோயமுத்தூரில் பொறுப்பில் இருக்கும் நிலையில், தாம் அந்தத் தொகுதியில் போட்டியிடுவது சுலபமல்ல என்று நினைக்கிறார் பிரபு.


அருண்குமார்

''உள்ளாட்சித் தேர்தலில் அதிகாரபூர்வ காங்கிரஸ் வேட்பாளர்களை எதிர்த்து ஆட்களை நிறுத்தியவர்கள்தான் வாசன் ஆதரவாளர்கள். கோயமுத்தூரில் மட்டுமல்ல; தமிழ்நாடு முழுதும், இன்னமும் தனிக் கோஷ்டியாக, இயங்குகிறார்கள் இவர்கள்'' என்று குற்றம் சாட்டுகிறார் பிரபு ஆதரவாளர்.

''மாற்றுவதானால் முதலில் மாநில தலைமையிலிருந்து

# வரிந்து கட்டும் வாசன்!


வாசன்

எல்லாவற்றையும் மாற்றுங்கள். எடுத்தேன், கவிழ்த்தேன் என்று எதாவது செய்து தனிக் கொடியைத் தூக்கும் நிலைக்குத் தள்ளிவிடாதீர்கள்'' என்கிறார் வாசன் ஆதரவாளர் முனைவர் பாட்சா.

''ஒரே நபர் எத்தனை வருடம்தான் பொறுப்பில் இருப்பார்? இயக்கத்துக்குப் புது ரத்தம் பாய்ச்ச வேண்டாமா? த.மா.கா.வை மீண்டும் துவக்குவோம் என்று மிரட்டல் விட்டால், அதற்கெல்லாம் மேலிடம் பயப்படாது'' என்கிறார், சிதம்பரம் ஆதரவு பிரமுகர் சிரஞ்சீவி.

இதற்கிடையில் கட்சி மாவட்டங்கள் 41ஆக குறைக்கப்பட இருக்கின்றன. ''நிர்வாகிகள் கூண்டோடு மாற்றப்படுவார்கள்'' என்கிறார் அருண்குமார். கடைசிவரை போராட முடிவு செய்துவிட்டது வாசன் தரப்பு. ஏனென்றால், இப்போது கணங்கிவிட்டால் பாராளுமன்றத் தேர்தலில் தங்கள் ஆட்களுக்கு வாய்ப்பு மறுக்கப்படும் என்ற பயம்தான்.

- ப்ரியன்

# பணம் செய்யும்



## பணம் இல்லாத ஊர் இருக்கிறதா கிரேஸி?

● பி.சிவா,
பாளையங்கோட்டை

*கணவன், மனைவிக் கிடையே சின்னச் சின்ன ரகசியம் இருந்தால் தவறா?*

சின்ன வீடு ரகசியமாக இருந்தால் தான் தவறு!

● எஸ்.உஷா சுதர்சன்,
திருச்செங்கோடு

*பணம் பத்தும் செய்யும் என்கிறார்களே... அந்தப் பத்து என்னென்ன?*

அளவுக்கு மீறிய பணம் ஆ'பத்தில்' முடியும். வீண் விரயமாக்கும் பணம் வி'பத்தில்' முடியும். இதுபோல, சுருட்டிய பணம் சா'பத்தில்', பலவந்தமாகப் பறித்த பணம் பா'பத்தில்', கருமியின் பணம் லோ'பத்தில்', பக்கத்து வீட்டுக்காரன் பணத்தைக் கண்டு பொறாமைப் பட்டால் தா'பத்தில்', ஆத்திரப்பட்டால் கோ'பத்தில்', அழுது புரண்டால் பிரலா'பத்தில்', மொட்டைக் கடுதாசி எழுதிப்போட்டால் தூ'பத்தில்', தனக்குள்ளேயே புழுங்கினால் துன்'பத்தில்'... இவையெல்லாம் பணம் செய்யும் 'டாப் டென்' சில்மிஷங்கள். சத்-விஷயத்துக்காகச் சேகரித்துச் செலவழிக்கும் பணமே சம்'பத்து'. ஆனால் ஒன்று, பணம் வருவதற்கு முன்பு பசி வந்தால், இந்தப் பத்தும் பறந்து போய்விடும்.

● வி.ஜி.சத்தியநாராயணன்,
நங்கநல்லூர்

*கங்கை நதியின் புனிதத் துவத்தின் சிறப்பு என்ன?*

பகீரதப் பிரயத்தனத்தால், ஆகாச கங்கை பூமிக்கு வந்தபோது அதன் வேகத்தைத் தன் ஜடா முடியில் தாங்கினார் பரமசிவன். ஈசனின் திருமுடியில் filter ஆகி வந்ததால், கங்கா ஜலம் பரிசுத்தமான புனிதத்துவம் பெற்றது. ஆம், கங்கைதான் முதல் aqua-God வாட்டர்.

● என்.கோமதி, நெல்லை

*சுத்தம் சோறு போடும்! சத்தம்?*

ஏப்பம் போடும்!

● வெ.கல்யாணி, திருநெல்வேலி

*மேற்கு வங்கத்தில் குடி போதையில் இருந்த ஒருவர் பாம்பைக் கடிக்க, அந்தப் பாம்பு இறந்துவிட்டதாமே?*

குடி போதையில் snakeக்கை snack என்று நினைத்துக் கொறித்துவிட்டார் போலிருக்கிறது. பாவம் பாம்பு, கடி போதையில் செத்திருக்கும்!

● ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்

*பெண்களுக்குப் பதிலாக ஆண்கள் குழந்தை பெற்றுக்கொள்ளும் வழக்கத்தை, பிரம்மா உண்டாக்கிவிட்டால்...?*

பிள்ளைகளைப் படைக்கும் பாக்கியத்தை தாய்க்குலத்திடமிருந்து, பிரம்மா நிச்சயம் பிடுங்கமாட்டார். Infact, தன்னைப்போல் படைக்கும் தாய்க்குலத்துக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதற்காகவே, ஆணாக இருந்தாலும் அவர் தன் பெயரை 'பிரப்பா' என்று வைத்துக்கொள்ளாமல் 'பிரம்மா' என்றுதான்

# ’பத்து’!

» கிரேஸியைக் கேளுங்கள் «

வைத்துக்கொண்டிருக்கிறார். ஒருவேளை நீங்கள் கேட்டதுபோல ஆண்கள் பிள்ளை பெறும் வழக்கம் வந்தால், தமிழ் அகராதியில் தாய்மை, தந்தைமை என மாற்ற வேண்டிவரும். வாந்தி எடுக்கும் கணவனைப் பார்த்து மனைவி 'அட கள்வா' என்று செல்லமாகக் கூப்பிட வேண்டிவரும். மசக்கைக்குப் புளிப்பாக கள்ளைக் கணவன் கேட்க வேண்டிவரும். 'கள்ளானாலும் கணவன்' என்று மனைவியும் கொடுக்க வேண்டிவரும். பிறக்கும் குழந்தைகளுக்கு இனிஷியலாக அம்மா பேரை வைக்க வேண்டிவரும். 'அப்பா என்றழைக்காத உயிரில்லையே' என்று பாட வேண்டிவரும். 'தந்தை-குழந்தை நல விடுதி' என்று ஆஸ்பத்திரி பெயர்களை மாற்ற வேண்டிவரும். கோபாலன் சார், உங்க பேர்ல 'பாலன்' இருக்கறதால, இருக்கற சிஸ்டத்தை மாத்தணும்னு அடம்புடிக்காதீங்க ப்ளீஸ்!

● ஜி.இ.பச்சியப்பன்,

திருவண்ணாமலை

*பெண் பார்க்கும் படலம் மாறி, ஆண் பார்க்கும் படலம் வருமா?*

அந்த நாட்களில் ஆண் பார்க்கும் படலம்தான் அமலில் இருந்தது. சுயம்வரத்துக்கு 56 தேசத்து ஆண் ராஜாக்கள் வந்து, பெண் இளவரசியை வசீகரிக்க வீர சாகசங்கள் என்ற பெயரில் கடலை போடுவார்கள். 'போரில்தான் என்று பார்த்தால், சுயம்வரத்திலும் புற முதுகு காட்ட வேண்டியதாகிவிட்டதே' என்ற இயலாமையில் தோத்துப் போன ராஜாக்கள் செய்த சதியால், பெண் பார்க்கும் படலமாக பின்னாளில் மாறிவிட்டது போலும். எனக்கென்னமோ, 'அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்' என்ற ஆண் - பெண் சரிசமமாகப் பார்க்கும் படலம்தான் உசத்தி என்று படுகிறது.



# ‘உட்லண்ட்ஸ்’ டிரைவ் இன் கனவு - கலைந்த கதை !



உடுப்பியைச் சேர்ந்த சிறுவன் கிருஷ்ணாராவ். வேலை தேடி சென்னைக்கு வந்து, சாரதாவிலாஸ் ஓட்டலில் எடுபிடிப் பையனாகச் சேர்ந்து, கடுமையான உழைப்பின் மூலம் முன்னேறி, ராதா கிருஷ்ணன் சாலையில் ஹோட்டல் நியூ உட்லண்ட்ஸையும் பின்னர் டிரைவ் இன் உட்லண்ட்ஸையும் நிறுவியது சரித்திரம்.

சரி! திடீரென்று இப்போது என்ன பிரச்னை? 1860ஆம் ஆண்டில் துவக்கப்பட்ட சென்னை விவசாய - தோட்டக் கலை கழகத்துக்கு அரசாங்கத்துக்குச் சொந்தமான சுமார் 44 ஏக்கர் நிலம் குத்தகைக்குத் தரப்பட்டது. அந்த சங்கம் நிதி நெருக்கடியில் தவித்ததைப் பயன்படுத்தி நிலத்தை வாங்கிக் கொண்டார் கிருஷ்ணாராவ். பிறகு அங்கே டிரைவ்-இன் தொடங்கி தமது ராஜ்ஜியத்தை விரிவுபடுத்தினார். இந்நிலையில்தான் 1989 ஆகஸ்ட்டில், தமிழக அரசு, தோட்டக் கலை கழகத்துக்குக் குத்தகைக்கு விடப்பட்டிருந்த நிலத்தைத் திரும்ப எடுத்துக் கொள்ள ஆணை பிறப்பித்தது. தோட்டக்கலைக் கழகத்தின் தலைவரான கிருஷ்ணமூர்த்தி, ‘அப்போது அ.தி.மு.க.வில் இருந்த கே.கே.எஸ்.எஸ்.ஆருக்குத் தாம் நெருக்கமானவர் என்பதால் தி.மு.க. அரசு தம்மைப் பழி வாங்கும் விதமாக இந்த உத்தரவை வெளியிட்டிருக்கிறது’ என்று வாதிட்டார். அதன் பிறகு, ஒரு கட்டத்தில் கே.கே.எஸ்.எஸ்.ஆர்., தி.மு.க.வில் சேர்ந்து அமைச்சரும் ஆகிவிட்டார். அண்மையில் சென்னை உயர்நீதி மன்றம், ‘‘அரசின் நடவடிக்கைக்குப் பழிவாங்கும் நோக்கம் இல்லை. அதுமட்டுமின்றி தோட்டக்கலைக் கழகம், மூன்றாவது நபருக்கு (உட்லண்ட்ஸ்) மேல் குத்தகைக்கு விட்டது சட்டத்துக்குப் புறம்பானது’’ என்று தீர்ப்பு அளித்துள்ளது. தோட்டக்கலைக் கழகத்திடமிருந்து திரும்பப் பெறப்பட்ட கதீட்ரல் சாலையின் இரண்டு பக்கங்களிலும் உள்ள இடத்தில், தோட்டக்கலை ஆராய்ச்சிப் பூங்கா அமைக்கப்போவதாக அரசு அறிவித்துள்ளது. இதனால், யாருக்கு மகிழ்ச்சியோ தெரியாது; மசால்தோசை பிரியர்களுக்கு மிகுந்த வருத்தமே!

– கௌதம்ராம்

# உயிர் காக்க உதவுங்கள்!

எனது மகன் பெயர் T. யோகேஸ்வரன் (வயது 3). இவனுக்கு இருதயத்தில் பாதிப்பு ஏற்பட்டு உள்ளது. இதனை இருதய அறுவை சிகிச்சை மூலம் சரி செய்யலாம் என்றும், இதற்கு ரூ.1,65,000 வரை செலவாகும் என்றும் மருத்துவர்கள் மதிப்பிட்டு உள்ளனர். ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த என்னால் இந்த அளவு தொகை செலவு செய்து சிகிச்சை செய்ய இயலாது. எனவே உதவும் உள்ளங்கள், தங்களால் இயன்ற நிதி உதவியை

**The Madras Medical Mission**
**Chennai - 600 037**

என்ற பெயரில் செக் அல்லது டி.டி. எடுத்து எனது முகவரிக்கு அனுப்பினால் மட்டுமே எனது மகனுக்கு சிகிச்சை மேற்கொள்ள இயலும் என தங்களை வணங்கி கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் உதவியை எதிர்பார்த்து R. தங்கவேல்



T.Yogaswaran

Disease:
Open Heart Surgery

Hospital
The Madras Medical Mission
Chennai - 600 037

Address:
R. Thangavel
# 160. 4th Cross,
Krishnamaachari Nagar,
Valsaravakkam,
Chennai - 600 087

# ஸ்டைலு ஸ்டைலுதான்...!

திருமணம், முதலீடு என எந்த நோக்கமும் இல்லாமல் ஸ்டைல் நகைகள் வாங்கி அணிந்துகொள்ள வேண்டுமென்பதே இளம் பெண்களின் இப்போதைய ட்ரெண்ட்! போட்டி போட்டுக்கொண்டு சில தங்க மாளிகைகள் புதிதாக அறிமுகப்படுத்தியிருக்கும் 'ஸ்டைலஸ்' நகைகளுக்குப் பெரும் வரவேற்பு!

''இந்த நகைகளை தினசரி உபயோகப்படுத்தலாம். ஆஃபிஸ், பார்ட்டி, காலேஜ் என தாராளமாகப் போட்டுக்கொண்டு போகலாம். சிம்பிளாக இருக்கும்; ஆனால், க்ளாஸாகத் தெரிவீர்கள். புடைவை, சல்வார் கமீஸ், ஜீன்ஸ் மற்றும் வெஸ்டர்ன் அவுட்ஃபிட்டுடன்கூட இந்த நகைகளை அணியலாம். இந்த ஸ்டைலஸ் நகைகள் பதினைந்திலிருந்து முப்பத்தைந்து வயதுப் பெண்களுக்கென்றே வடிவமைக்கப் பட்டுள்ளன...'' என்கின்றனர் புதிய ரகங்களை அறிமுகப்படுத்திவரும் ஜி.ஆர்.டி. நிறுவனத்தினர்.



''முன்பெல்லாம், நகைகள் வாங்குவதென்றால் வீட்டிலுள்ள பெரியோர்கள், அவர்கள் விருப்பத்துக்கு வாங்குவார்கள். ஆனால், இன்று லைஃப் ஸ்டைல் மாறிவிட்டது. இருபத்துமூன்று வயதுப் பெண் இன்று கைநிறைய சம்பாதிக்கிறாள். அவளுக்கென்று ஆசை, டேஸ்ட், செலக்ஷன் என



# நடைபழகு...

எல்லாம் இருக்கிறது. தானே தனியாக அல்லது ஃப்ரெண்ட்ஸுடன் வந்து ஜாலியாகத் தன் விருப்பத்துக்கேற்றவாறு நகைகள் வாங்கி அணிந்துகொள்ள விரும்புகிறாள். பெரிய பெரிய அட்டிகை, ஆரம், இரட்டை வடம்... என வாங்கி, லாக்கரில் பூட்ட அவளுக்கு இஷ்டமில்லை. காண்டம்பரரி ரசனையுள்ள பெண்களுக்கென்றே ஏற்பட்டவைதான் ஸ்டைலஸ் நகைகள்!'' என்கிறது ஜி.ஆர்.டி. என்ன துல்லியமான கணிப்பு!



தங்கம், வைரம், ப்ளாட்டினம் ஒயிட் கோல்ட் மற்றும் கற்கள் பதித்த நகைகள் அற்புதம். மோதிரம், லாக்கெட், செயின், கம்மல்கள் என வெரைட்டி ஏராளம். ஒரு மோதிரத்தின் விலை ஐயாயிரம். டிசைனுக்கும் எடைக்கும் தகுந்த மாதிரி விலை. நெக்லஸ் பதினைந்தாயிரத்திலிருந்து கிடைக்கிறது.

''பவுன் விலை ஏறிப் போச்சு'' என்று பிலாக்கணம் பாடும் பாட்டிகள்கூட இனி அதை நிறுத்திவிட்டு, ''என் பேத்தி தானே சம்பாதிக்க, தானே செலக்ஷன் பண்ணி நகை வாங்கியிருக்கா'' என்று பெருமையடிச்சுக்கலாமில்லே!

– லதா சேகர்

சமீபத்திய டாலர் சரிவு 'கால் சென்டர்களில் வேலை வாய்ப்பைக் குறைத்து விடுமோ?' என்ற கேள்வியை எழுப்பியுள்ளது...

பி.பி.ஓ. (பிஸினஸ் ப்ராஸஸ் அவுட்ஸோர்ஸிங்) தகவல் தொழில் நுட்பத்தின் ஒரு பிரிவான கால் சென்டர்கள் இந்தியா

# கால் சென்டர் வேலைவாய்ப்பிலும்



வைப் பொருத்தவரை வேலை வாய்ப்புகளை வழங்குவதில் ஒரு காமதேனு.

பட்டப்படிப்பு முடிவதற்குள்ளேயே கல்லூரிகளில் காம்பஸ் இன்டர்வியூ வைத்து, கால் சென்டர்களில் பணிபுரிய ஊழியர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். எட்டு வருடங்களுக்கு முன் பலரும் கேள்வியே பட்டிருக்காத இந்தத் துறையில் இன்று சுமார் ஏழு லட்சம் இந்தியர்கள் வேலை செய்கிறார்கள்.

மேலை நாடுகளிலுள்ள பிரபல நிறுவனங்கள் தங்கள் தயாரிப்புகளை வீடு வீடாக எடுத்துச் சென்று விற்பதில்லை. 'டெலிமார்க்கெட்டிங்' என்கிற உத்தியைப் பயன்படுத்துகின்றன. அதாவது, பொருள்களைப் பற்றிய தகவல்கள் குறிப்பிட்ட வலைத்தளத்தில் இருக்கும். அதைப் படித்துவிட்டு ஆர்டர் செய்தால் வீடு தேடி பொருள் வரும். ஆனால், இந்த வலைத்தளத்தைப் படிக்கும்போது வாடிக்கையாளர்களுக்குப் பலவித சந்தேகங்கள் எழ வாய்ப்பு உண்டு. அவற்றிற்கெல்லாம் பொறுமையாகப் பதில் சொல்ல பல நிறுவனங்களிடம் நேரமும் ஆள்படையும் இருப்பதில்லை. இந்தப் பொறுப்பை கால் சென்டர்களிடம் அவை விடுகின்றன.

சமீப காலமாக அமெரிக்க டாலர் மதிப்பு (ஒரே வருடத்தில் சுமார் பத்து சதவிகிதம்) வீழ்ச்சி கண்டிருக்கிறது. இதனால் அமெரிக்க வணிக லாபம் பாதிக்கப்படும். தனது இந்தச் சுமையை அமெரிக்க நிறுவனங்கள் தங்களுக்கு பி.பி.ஓ. செய்து தரும் இந்திய நிறுவனங்களிடம் தள்ளப் பார்க்கும். முன்பை விடக் குறைவான தொகையையே அமெரிக்க நிறுவனங்களிடமிருந்து பெற முடியும். (ஒப்பந்தங்கள் டாலரில் போடப் பட்டிருக்கவே வாய்ப்பு அதிகம்).

இந்த நிலையை இரண்டு விதங்களில் இந்திய கால் சென்டர்கள் எதிர்கொள்ள வாய்ப்பு இருக்கிறது.

இனி ஐரோப்பிய வாடிக்கையாளர்களிடம் கால் சென்டர் உரிமையாளர்கள் அதிக கவனம் செலுத்துவார்கள். ஏனென்றால், ரூபாயோடு ஒப்பிடும்போது யூரோ மேலும் பலமடைந்திருக்கிறது. பிரிட்டனில் ஊழியர்களுக்கு வழங்கப்படும் ஊதியம், நம் ஊழியர்களுக்கு வழங்

கப்படுவதைப் போல சுமார் பத்து மடங்கு. தவிர, அடுத்த அமெரிக்க ஜனாதிபதியாக வர வாய்ப்பு உள்ளவர்களாகக் கரு தப் படும் ஒபாமா, ஹிலாரி கிளிண்டன் ஆகிய இருவருமே பி.பி.ஓ. முறை வெளிநாடுகளுக்குச் செல்வது குறைக்கப்பட வேண்டும் என்று கருதுபவர்கள். (அமெரிக்க மக்களின் வேலை வாய்ப்பு பாதிக்கப் படுகிறதே!)

ஆனால், 'கால் சென்டர்களில் பணியாற் றும் தகுதி படைத்தவர்கள் நம் நாட்டில் மிகக் குறைவாகவே இருக்கின்றனர்' என்



# வீழ்ச்சியா?

கிற முணுமுணுப்பு அமெரிக்க, ஐரோப்பிய வாடிக்கையாளர்களிடையே எழத் தொடங்கி யிருக்கிறது. 'தகுதி' என்பது இங்கு பட்டப் படிப்பு அல்ல. ஆங்கிலப் பேச்சுப் புலமை; உச்சரிப்புத் துல்லியம். 1981ல் GE நிறுவனம் கென்டக்கியில் இதுபோன்ற ஒரு வாடிக்கை யாளர் சேவையை உருவாக்கியபோது, எந்த வித அமெரிக்க உச்சரிப்பை அமெரிக்க மக்களில் பலரும் ஏற்கிறார்கள் என்பதை அறிய மூன்று மாதங்களை ஆராய்ச்சியிலேயே செலவிட்டது!

பட்டதாரிகளுக்கு உடனடி வேலை வாய்ப்பு என்கிற காரணத்தால் இந்தியாவுக்கு கால்சென் டர்கள் தேவைப்படுகின்றன. அதேசமயத்தில் இங்கு (ஒப்பிடுகையில்) குறைந்த ஊதியமே போதுமென்பதால் மேலை நாடுகளுக்கு நாம் தேவைப்படுகிறோம். இந்தத் தொடர்பு அவ் வளவு சுலபத்தில் அறுந்துவிடாது. மேலே கூறிய வகையில் இந்திய கால் சென்டர்கள் தங்களை மாற்றிக்கொள்ளும்.

அமெரிக்கப் பொருளாதாரத் தில் முன்னேற்றம் இல்லை என் றாலும் கூட, டாலர் மதிப்பின் வீழ்ச்சியையும் மீறி, 2012ல் கால் சென்டர் வணிகம் ஐந்து கோடி டாலர் அளவுக்கு வளர்ந்து, இரண்டு கோடி பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் என்று பொருளாதார நிபுணர்கள் கணிக்கிறார்கள்.

– குல்லு





# கல்கி



2008 ஏப்ரல் 27
ஸர்வதாரி சித்திரை 15
மலர் : 66
இதழ் : 39

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## நூறு சதவிகிதம் நல்ல தீர்ப்பு!

இருபத்தேழு சதவிகித இட ஒதுக்கீடு தொடர்பான உச்சநீதி மன்றத் தீர்ப்பு மிகவும் கவனத்துடன் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஒதுக்கீடை வழங்க அரசியல் சாசனத் திருத்தம் கொண்டு வந்தது தவறல்ல; அரசின் உரிமைக்குட்பட்ட செயலே என்று முதற்கண் உறுதி செய்கிறது இத்தீர்ப்பு. பிற பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு 27 சதவிகித இட ஒதுக்கீடை (உயர் கல்வி நிறுவனங்களில்) உறுதி செய்யும் அதே வேளையில், அவர்களுள் பொருளாதார வசதி படைத்தவர்களுக்கு இச்சலுகை வழங்கப்படக்கூடாது என்பதையும் நிபந்தனையாக்கியிருக்கிறது.

"பொருளாதார வசதி மட்டுமே முன்னேற்றத்தின் அடையாளம் அல்ல" என்று சில அரசியல் கட்சிகள் இத்தீர்ப்பை எதிர்த்து வாதாடுவது அபத்தமாக இருக்கிறது. இந்த ஆட்சேபத்தை எழுப்புவோர் உச்சநீதி மன்றத் தீர்ப்பை முழுமையாக ஊன்றிப் படிக்க மறுக்கிறார்கள்; அல்லது அதைப் படித்த பிறகும் தங்கள் பிடிவாதத்தில் தொடர்கிறார்கள்!

ஐந்து நீதிபதிகள் அடங்கிய பெஞ்ச் இவ்வழக்கை ஆராய்ந்திருக்கிறது. அவர்களுள் உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி கே.ஜி.பாலகிருஷ்ணன், நீதிபதிகள் ஆர்.வி.ரவீந்திரன், பண்டாரி ஆகியோர் தனித்தனியே தீர்ப்புகள் எழுதியுள்ளனர். நீதிபதிகள் பசாயத், தாக்கர் ஆகியோர் இணைந்து தீர்ப்பு தந்துள்ளனர். அனைவருமே ஒரு குரலில் சுட்டிக் காட்டும் விஷயம் - இட ஒதுக்கீடு என்பது ஜாதிப் பிரிவினையைப் போக்கி ஜாதிகளிடையே சம அந்தஸ்த்தை ஏற்படுத்துவதற்குப் பதிலாக, பிளவை அதிகரித்துக்கொண்டே வந்துள்ளது என்பதைத்தான்!






பிற்படுத்தப்பட்ட பிரிவினர் இதுவரை பெற்ற இட ஒதுக்கீடால் பயனடைந்து, பொதுப் பிரிவுக்கு மாறி சலுகைகளைத் துறக்க வேண்டும். ஆனால் அதற்குப் பதிலாக, சலுகைகளை அனுபவிக்கும் நோக்கில், மேலும் பல பிரிவினர் பிற்படுத்தப்பட்டோராக அறிவிக்கப்பட ஆவல் கொள்ளும் அவலம்தான் இங்கே காணக் கிடைக்கிறது.

இட ஒதுக்கீடு அளிப்பதுடன் அரசின் பொறுப்பு முடிந்துவிடுவதில்லை. பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு ஆரம்பக் கல்வி நிலையிலேயே சிறப்புக் கவனமும் உதவியும் வழங்கி, அவர்களது தகுதியை உயர்த்தும் பொறுப்பும் அரசுக்கு இருக்கிறது. அது மட்டுமின்றி, ஐ.ஐ.டி., ஐ.ஐ.எம். போன்ற அரசு உதவி பெறும் உயர் கல்வி நிறுவனங்களில், சலுகை அடிப்படையில் இடம் கோரும் பிரிவினர் பட்டியலை, சில ஆண்டுகளுக்கு ஒரு முறை மறுபரிசீலனைக்கு உட்படுத்த வேண்டும். எந்தப் பிரிவுகள் முன்னேற்றம் அடைந்துவிட்டனவோ, அவற்றைப் பட்டியலிலிருந்து நீக்கிவிட வேண்டும். இதையெல்லாம் செய்யாமல், கால வரம்பின்றி ஒதுக்கீடை மட்டும் தொடர்வது, ஜாதிப் பிரிவினை உணர்வுகளைத்தான் வளர்க்குமேயொழிய பிற்படுத்தப்பட்டவர்களை முன்னேற்றாது.

- இவ்வாறெல்லாம் எச்சரித்துள்ளனர் நீதிபதிகள். அதிலும் நீதிபதி ரவீந்திரன், ''இட ஒதுக்கீடு என்ற ஊன்றுகோலைத் தந்து, அதனைச் சார்ந்திருக்கவும் மக்களைப் பழக்கி, அவர்களை நிரந்தரமாக முடமாக்குவது என்ன நியாயம்?'' என்று கடுமையாகவே விமர்சித்திருக்கிறார்.

ஆனால், அரசியல் கட்சிகள் இந்த விமர்சனங்களையும் எச்சரிக்கைகளையும் சிறிதும் இலட்சியம் செய்யவில்லை. இந்தத் தீர்ப்பே தி.மு.க. தலைவரின் முயற்சியால் கிடைத்த வெற்றி என்று தமிழக சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்படுகிறது; வேறு பல கட்சிகள் 'கிரீமி லேயர்' பிரிவினருக்குச் சலுகை கூடாது என்பதை ஏற்க மறுக்கின்றன. சமூக நீதிக்கு அரசியல் சாயம் பூசி பொம்மலாட்டம் காட்டுவதை நிறுத்திவிட்டு, அனைத்து அரசியல் தலைவர்களும் உச்சநீதிமன்றத் தீர்ப்பின் சீரிய நோக்கத்தைப் புரிந்துகொண்டு, இந்த ஒதுக்கீடை அர்த்தமுள்ளதாக்க பாடுபட வேண்டும்.




**கதை:** பெண்களைத் தவறான கண்ணோட்டத்தோடு அணுகுபவர்களைத் தேடிப் பிடித்துக் கொலை செய்வது!

**திரைக் கதை:** தெளிவில்லாம தளர் நடைபோடும் குழந்தை!

**வசனம்:** கதைக்கேற்ற பக்க வாத்தியம்! (பட்டுக்கோட்டை பிரபாகர்)

**ஹீரோ பரத்:** இந்த நடிப்புக்குத் தான் இத்தனை பில்டப்பா! கொஞ்சம் நடிங்க அப்பு!

**ஹீரோயின் மீரா ஜாஸ்மின்:** ஒரே ஆறுதல்; இளமைத் துள்ளல்!

**இசை:** ஸ்ரீகாந்த் சார், கொஞ்சம் இசையில கான்சன்ட்ரேட் பண்ணுங்க!

**பாடல்கள்:** காதல் சடுகுடு; (யுக பாரதி/விஜய்சாகர்/கார்த்திக் நேதா)

**கேமரா:** 'மதி'யின் நுட்பம் தெரிகிறது. காதல் காட்சிகளில் குற்றாலச் சாரல்.

**சிறப்பு:** பரத் போடும் கெட்டப் சேஞ்ச்.

**இயக்கம்:** Z. துரை. பரத், மீரா ஜாஸ்மீன் காதல் காட்சிகளையாவது சுவாரஸ்யமாகக் கொடுத்தாரே, பாராட்டுகள்!

– அம்ருதா

# கடைசி காதல் கவிதை...

உலகச் சந்தையில்
ஆதாமின் ஆப்பிள் கவிதைகள்
பழசாகிப் போய்...
வேறு வழியின்றி
எலுமிச்சை கவிதைகளுக்கு
ஏக டிமாண்ட்!

ரீசார்ஜ் கூப்பனில்
சிக்கிக்
கொண்டிருந்தது
விக்கிரமாதித்த வேதாள
எஸ்.எம்.எஸ். காதல்...

வலைத்தளங்களின்
வைரஸ்களுக்குப் பெயர்
வைப்பதிலேயே
கழிந்து கொண்டிருந்தது
தேவதைகளின் வசீகரிப்பு...

விரட்டிவிரட்டி
காதல் சொல்லச் சொன்னது
பண்பலை...
பெயர் சொல்லி குதூகலிக்கும்
வாலிபம்
மெட்ரோ தெருக்களில்...

கிண்டர்கார்டனில்
அடையாள அட்டைகளோடு
காதலின் நர்சரி ரைம்கள்...

கசாப்புக் கடைக்குப் போகும்
ஆட்டுக்குட்டியைப்
பார்த்துக்கொண்டுதான்
எழுத வேண்டியிருக்கிறது
இந்த நூற்றாண்டின்
கடைசி காதல் கவிதையை...

ஆர்.நாகப்பன்





# கண்ணனைத் தேடி...

1

உபநிஷத் வாக்கியங்கள் பகவானைப் பற்றிச் சொல்கிறபோது, ''நீயே எல்லா உண்மைகளாகவும் இருக்கிறாய்'' என்று சொல்கின்றன. ஸத்யம், ஞானம், அனந்தம், பிரஹ்ம என்று அவனை அடையாளப்படுத்திச் சொல்கின்றன. பிரஹ்ம என்பது இங்கே பரம்பொருளான பகவானைக் குறிக்கும். அனந்தம் என்று சொன்னால் அந்தமற்றது - முடிவற்றது. இடத்தாலோ, காலத்தாலோ உருவ அமைப்பினாலோ கட்டுப்படாதது. ஞானம் என்றால் என்னவென்பது தெரியும் - பேரறிவு; பகவானிடத்திலே மட்டுமே ஒளிர்கிற சர்வ வல்லமை.

ஸத்யம் என்பது என்ன...? பிரஹ்மத்தின் முதல் அடையாளமாகச் சொல்லப்படும் இந்தக் குணம் எதைக் குறிக்கிறது? ஸத்யம் என்று சொன்னதால் பகவான் உண்மை பேசுகிறவன் என்று இங்கே சொல்ல வரவில்லை! பகவான் எப்போதும் ஒரு படி பட இருக்கிறான். ஸதா ஒரே ரூபம் படைத்தவன்; அவனுடைய ரூபம் மாறாது, குணம் மாறாது, எதுவும் மாறாது..! பிரஹ்மத்தின் இந்த முக்கியமான நிலையைத்தான் உபநிஷத்துக்கள் ஸத்யம் என்று குறிப்பிடுகின்றன.

அந்த ஸத்யத்தைத் தேடிக் கண்டுவிட்டால் நமக்கு வேறெதுவும் தேவையில்லை. ஆனால், வேதாந்தம் என்றாலே அது ரொம்ப மறைத்து மறைத்துதான் பொருளைக் கொடுக்கும். அதனால்தான் பகவான் நம்மிடத்திலே மிகுந்த கருணையோடு, ''ஸத்யத்தைத் தேடிக்கொண்டு எங்கேயும் போக வேண்டாம்'' என்கிறான்! 'ஏதேனும் ஊரில் இருக்குமா? மலையில் இருக்குமா? காட்டில் இருக்குமா?' என்று

# ஸ்ரீ வேளுக்குடி க்ருஷ்ணன் சுவாமிகள்

ஸத்யத்தைத் தேடாமல் நேரே நாம் திருமெய்யத்துக்குப் போவோம்!

மெய்யானை மெய்ய மலையானை சங்கேந்தும்
கையானை கைத்தொழாக் கையல்ல கண்டோமே!

என்று திருமங்கையாழ்வார் பாடிய ஸத்யநாராயண மூர்த்தியை, மெய்யன் எம்பெருமானை திருமெய்யத்தில் கண் குளிரக் காண் போம்.

இடமே மெய், காடே மெய், க்ஷேத்திரமே மெய், மலையே மெய், பகவானே மெய் என்று இருக்கக்கூடிய திவ்ய தேசம் திருமெய்யம். புதுக்கோட்டையிலிருந்து மதுரை செல்லும் சாலை யில், பதிமூன்றாவது கி.மீ.யில் இருக்கிறது. பாண்டிய நாட்டுத் திருத்தலங்களிலே முக்கியம் வாய்ந்தது. மலைக் குடவரைக் கோயிலில் இங்கே ஸத்யமூர்த்தி பெருமான் ஸேவை சாதிக்கிறான்.

மலை என்பதே அசையாதது - அசலம் என்று பெயர் அதற்கு. வேங்கடாசலம் (திருமலை), சிம்ஹாசலம் (விசாகப்பட்டினம் அருகே உள்ளது), கடிகாசலம் (சோழசிங்கபுரம்) என்று மலை மேல் எம்பெருமான்



உறையும் தலங்கள் இருக்கின்றன. திருமெய்யத்திலோ, மலைக் குடைவரைக் குள்ளே ஸத்யன் எம்பெருமான் பள்ளி கொண்ட பெருமானாக உறைந்து, மலையைப் போல் உண்மையும் எப் போதும் அசையாது என்பதை உணர்த்திக் கொண்டிருக்கிறான்.

அர்த்தமண்டபம், மஹாமண்டபம் என்று சாதாரணமாகச் சொல்வோமே... அந்த மஹாமண்டபம் அளவுக்கு கர்ப கிருஹமே இருக்கிறது இங்கே. அதிலே சயனத் திருக்கோலத்தில்



* திருமெய்யத்து உத்தமர்

காணப்படும் எம்பெருமான் இங்கே எதற் காக வந்தார் என்பது சுவையான சரித்திரம்:

ஆதிசேஷன், பகவானுக்கு எல்லா வகைகளிலேயும் தொண்டுகள் புரிபவர்; பணிவிடைகள் செய்பவர். பாம்பு என்றாலே கோபம் அதிகமல்லவா? ஆதி சேஷனுக்குத் தன்னுடைய கோபத்தைக் குறைத்து, நல்ல ஸத்வ குணத்தை வளர்த் துக்கொள்ள வேண்டும் என்று தோன்ற, அதற்காக பகவானைக் குறித்து தியானிப் போம்; தவம் புரிவோம் என்று இங்கு வந்தார். ரொம்ப நீளமான திருவுருவத் துடன் கூடிய அவர், இந்த இடத்திலே தன்னைச் சுருக்கிக்கொண்டு யோகத்தில் இருந்தார். (அவர் இந்த வழியாக வந்தத னாலே, இங்கே பக்கத்திலே பாம்பாறு ஓடுகிறது). எம்பெருமானும் ஆதிசேஷனு டைய தவத்தைக் கண்டு உகந்தவனாய் எழுந்தருளினார். வந்தவருக்கு மரியாதை செலுத்தவேண்டுமல்லவா- தன்னையே ஆஸனமாக்கினார். ஆதிசேஷனே நாற்காலி யாக, அவரிடத்திலே உட்கார்ந்துவிட்டார் எம்பெருமான். வந்தவருக்குக் காற்று வர வேண்டுமே...! ரொம்ப வியர்த்து விறு விறுத்து பெருமாள் பக்தனுக்கு இரங்கி ஓடி வந்திருக்கிறார் இல்லையா...? ஆகவே ஆதிசேஷன் இழுத்து மூச்சுவிட்டார். அந்த மூச்சே அவருக்குக் காற்றாயிற்று. விசிறி வீசியாக வேண்டும். தம் நாக்குகளை இப்படியும் அப்படியும் புரட்டினார். அது விசிறி வீசுகிறார்போல் இருந்தது. பெரு மானுக்கு வெளிச்சம் வேண்டும் - கண் ணாடி காட்ட வேண்டும். தன்னுடைய தலையிலே இருக்கக்கூடிய நவரத்தின மணிகளைச் சிலுப்பினார்; அதிலிருந்து ஒளி பிறந்தது!

'இருள் இரியச் சுடர் - மணிகள்
இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணி பணம்
ஆயிரங்கள் ஆர்ந்த
அரவ - அரசப் பெருஞ் சோதி அனந்தன்'

என்று ஆழ்வார் பாடியுள்ளாரே அதன் படிக்கு எல்லா உபசாரங்களையும் ஆதி சேஷன் பண்ண, ''உமக்கு என்ன வேண்டும்?'' என்று பகவான் கேட்க,

''எமக்கு ஸத்வ குணத்தைக் கொடும்'' என்று பிரார்த்தித்தார். ''ஸத்வத்தையும் கொடுக்கிறோம்' ஸத்யத்தையும் கொடுக்கிறோம்'' என்று பகவான் அருளினார்.

ஸத்வ குணம் என்பது வெண்மையாக இருக்கும். ''ஆதிசேஷனே! நீரும் வெண்மையாக இருக்கிறீர்; நானும் இதோ உமக்கு வெள்ளையாக ஸேவை சாதிக்கிறேன்'' என்று சொல்லி, பகவான் காட்சி கொடுத்தான். கருமைநான் கண்ணன். ஆனால், மெய்யனாக - உண்மை ரூபத்திலே இங்கே காட்சி கொடுப்பதன் அடையாளமாக வெண்மை நிறம் ஏற்றான். இந்த திருமெய்யத்து மெய்ய மலைக்குள்ளேயே அவன் காட்சி கொடுத்ததால் இதற்கு ஸத்யகிரி என்றே பெயர்.

அன்று தொடக்கமாக இன்று வரை, ஸத்யகிரிநாதனாக, எம்பெருமான் ஆதிசேஷனின் மடியிலேயே சயனித்துக் கொண்டிருக்கிறார். மூலஸ்தானத்தில் பெருமாள் சயனித்துக் கொண்டிருக்கிற அழகு, கைகளை வைத்துக் கொண்டிருக்கிற அழகு என்று கவனமாக நாம் ஸேவிக்க வேண்டும். வலது திருவடிக்குக் கீழே பூமிப்பிராட்டி எழுந்தருளியிருக்கிறாள். இந்தப் பூமியை அழித்துத் துன்புறுத்த வேண்டும் என்று மது-கைடபர்களென்ற அசுரர்கள் வந்தார்கள். அப்போது பூமிப்பிராட்டி பயந்தாள். ''பயப்படாதே! நான் இருக்கிறேன்'' என்று வலது திருக்கையால் அவளுக்கு அபயம் அளித்தான். மேலே திருமார்பில் ஸ்ரீதேவி நாச்சியார் இருந்தாள். இடது கையைத் தூக்கி, ''கவலைப்படாதே!'' என்று அவளுக்குக் காட்டினான்.

பிராட்டிக்கு ஆபத்து வந்ததைப் பொறுக்காத ஆதிசேஷன், கோபத்தோடு தமது மூச்சுக்காற்றிலே அக்னிப் பிழம்பைத் தெறிக்கவிட, மது கைடபர்கள் ஓடிவிட்டார்கள். ஆனால், இப்போது ஆதிசேஷனுக்கே பயம் வந்துவிட்டது! 'பெருமாள் தன் மடியிலே சயனித்துக் கொண்டிருக்கிறபோதே இப்படிப் பண்ணிவிட்டோமே!' என்கிற வெட்கம் கலந்த பயம்! அதனால் ஐந்து தலைகளையும் சுருக்கிக்கொண்டு பயந்தாற்போலே இங்கே எழுந்தருளியிருக்கிறார் ஆதிசேஷன்.

உடனே பெருமாள் ஆதிசேஷனை ஆறுதல்படுத்தினார்: ''நம் கைங்கர்யத்துக்காகத் தானே பண்ணினாய், கவலைப்படாதே!'' என்று தமது வலது கரத்தை நீட்டி, கீழே அணையாக இருந்த பாம்பைத் தட்டிக் கொடுத்தார். அதனால் இத்திருத்தலத்திலே சத்யநாராயண பெருமாளின் வலது

**மூலஸ்தானத்தில் பெருமாள் சயனித்துக் கொண்டிருக்கிற அழகு, கைகளை வைத்துக் கொண்டிருக்கிற அழகு என்று கவனமாக நாம் ஸேவிக்க வேண்டும்.**





திருக்கரம் பாம்பைத் தட்டிக் கொடுக்கிறது. இடது திருக்கரம் இப்படித் தூக்கி, ஸ்ரீதேவி நாச்சியாருக்கு அபயம் அளிக்கிறது. வலது திருவடி பூமிப்பிராட்டியாருக்கு அபயம் அளிக்கிறது. இப்படி, சுற்றுப் புறத்திலே முப்பத்து முக்கோடி தேவர்களோடும், கூட பல பல மஹரிஷிகளோடும் சேர்ந்து ஸேவை சாதிக்கிறான்.

திருவரங்கத்து ரங்கநாதனைப் போலே இந்த ஸத்யன் எம்பெருமானுக்கும் தெற்கு நோக்கிய சன்னிதி. தாயார் உய்யவந்த நாச்சியாராக, உஜ்ஜீவன நாச்சியாராக திருநாமம் ஏற்று, நம்மை உய்விக்கக் காத்திருக்கிறாள்.

இந்தியாவின் புகழ் மிக்க குடைவரை கோயில்களுள் ஒன்று இது. இங்கே இருக்கக்கூடிய சிற்ப அழகுகளைக் காண கண் கோடி வேண்டும். இந்தத் திருத்தலத்துக்கு ஸத்தியகிரி க்ஷேத்திரம் என்றும் ஒரு திருப்பெயர் உண்டு... இங்கே இருக்கிற மலை (கிரி)யே ஸத்ய மலை. காடே ஸத்யம் - ஸத்ய வனம்... இந்தப் பெயர்கள் எப்படி அமைந்தன என்பது இன்னொரு சுவையான கதை - அதை அடுத்த வாரம் பார்ப்போம்.

(தேடுவோம்)

சித்திரங்கள் : **வேதா**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# ஜாலமில்லாத வார்த்தை!

அமெரிக்காவில் வசிக்கும் தமிழன்பர்கள் நால்வர் சேர்ந்து, இலக்கிய உலகுக்கு இன்னுமோர் இதழைத் தருவித்துள்ளார்கள். 'வார்த்தை' முதல் இதழை ஜெயகாந்தன் வெளியிட்டார். இணையாசிரியர் பி.கே. சிவகுமார் வரவேற்புரை ஆற்றினார்.

ஜெயகாந்தன் சிறப்புரையாற்றும்போது, ''இன்று பிறந்த ஆரோக்கியமான குழந்தை 'வார்த்தை'. இதை விமர்சனம் செய்ய முடியாது; வாழ்த்துகிறேன். இது நன்கு வளர்ந்து, தன் உயரிய வளர்ச்சியைக் காட்டும்போது, விமர்சனம் செய்வோம். விமர்சனம் என்றால் குறைகளைச் சொல்வது இல்லை; நிறைகளை எடுத்துச் சொல்வோம்'' என்றார்.

ஏப்ரல் 6 அன்று சென்னை தி.நகரில் விழா. அதே மேடையில் அரவக்கோனின் 'இந்திய மண்ணில் ஓவிய நிகழ்வுகள்', பாவண்ணனின் 'துங்கபத்திரை', வெங்கட் சாமிநாதனின் 'தமிழகக் கலைகளின் இன்றைய முகங்கள்', ந.முருகானந்தம் தொகுத்த 'அமெரிக்காவில் ஜெயகாந்தன்' ஆகிய நான்கு புதிய புத்தகங்களை முறையே இரா.முருகன், மணா, கே.எஸ். சுப்பிரமணியன், நாஞ்சில் நாடன் ஆகியோர் வெளியிட்டு, விமர்சித்து உரையாற்றினார்கள்.




பாவண்ணனின் கட்டுரைகள், சாகித்ய அகாடமி விருதுக்குப் பரிந்துரைக்கும் அளவுக்குத் தகுதி கொண்டவை என்று பாராட்டிப் பேசினார், புதிய பார்வை இணையாசிரியர் மணா.

தமிழ்ச் சிற்றேடுகள் வரிசையில், ஜாலமின்றி உதயமாகியிருக்கிறது 'வார்த்தை'.

– **மித்ரா**

# புள்ளிகள்... கோலங்கள்...

**கா**லை பதினொரு மணி.

புறநகரின் அமைதியான அவென்யூ வின் இரண்டாவது பிரதான சாலையில் ஷூட்டிங்.

பூபதி, சுறுசுறுப்பாய் இயங்கிக்கொண் டிருந்தான்.

அன்றைய காட்சியில் நடிக்க வேண்டிய ஆர்ட்டிஸ்ட்டுகளுக்கு, காட்சிகளை ஒரு முறை விளக்கினான்.

''ரவி.. கவிதாவின் தம்பியான நீங்க, வீட்டுக்குச் சொல்லாம, வெளியில் வந்து நாலு நண்பர்களோடு தெரு முனை பிள்ளையார் கோயிலுக்கு வர்றீங்க. கவிதா வேலை பார்க்கும் கம்பெனியின் முத லாளி மகள் பூர்ணிமா, உங்களுக் காக கோயில் பக்கத்துல காத்துக் கிட்டிருப்பாங்க. ரெண்டு பேரும் மாலைய மாத்திக்கறீங்க. மஞ் சள் கிழங்கு கட்டிய தாலியை அவங்க கழுத்துல கட்டிட்டு, நீங்க பேச வேண்டிய டயலாக் என்ன தெரியுமா...'' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, கைபேசி ரீங்கரித்தது.

'பச்.... இது வேற...' என்று எடுத் தவன் அழைப்பது யார் என்று பார்த்து, உடனே தொடர்புகொண்டான்.

சட்டென்று நிமிர்ந்து, பவ்யமாக,

''சார்... ஷூட்டிங் போய்க்கிட் டிருக்கு. ஈவ்னிங் வரட்டுமா சார்...?''

''.......''

''ஓ.கே.... சார்... இப்பவே வர்றேன் சார். பத்து நிமிஷத்துல வந்துடறேன் சார். தேங்க்ஸ் சார்.''

ஆஃப் பண்ணி பாக்கெட்டில் போட்டான்.

வியர்த்திருந்தான்.

உதவியாளரை அழைத்தான்.

''நீங்கள் கன்டின்யூ பண்ணுங்க. நான் புரொட்யூசரைப் பார்த்துட்டு வர்றேன்'' என்று சொல்லிவிட்டு காரை நோக்கிப் போனான்.

**''வா**ங்க மிஸ்டர் பூபதி... உட்காருங்க..'' பொன்ராஜ் வரவேற்று, இருக்கையைச் சுட்டினார்.

''தேங்க்ஸ் சார்.''

ஒரு வகைக் குழப்பத்துடனே, சோபாவில் அமர்ந்தான் பூபதி.

''அவசரமா வரச்சொன் னீங்க!''

''ஆமாம். முக்கியமான விஷ யம் பேசணும். என்ன சாப் பிடறீங்க, காஃபி, டீ...?''

''பரவால்ல சார்...''

பொன்ராஜ், அட்டெண்டரை அழைத்து,

''கந்தசாமி...



சாருக்கு காஃபி கொடு'' என்றார்.

காஃபி வந்தது.

''சார் உங்களுக்கு...'' என்றான் பூபதி.

''நான் இப்பதான் விஷம் சாப் பிட்டேன்'' என்றார் முக இறுக் கத்துடன். (தொடரும்)

# A BOON FOR THE POOR WHO ARE COMBATING CANCER



## Our Dharmasala -A facility unknown hitherto



"Padma Bhushan"
Dr. V.SHANTA
Executive Chairperson,
Cancer Institute, Adyar.

Way back in August 2000, the untiring efforts of Padma Bhushan Dr.V.Shanta, Chairperson of the Cancer Institute, Adyar resulted in commissioning a Dharmasala in their premises with generous funds from the Donors of Rajasthani Community. It accommodates poor cancer patients from villages who are treated as outpatients.

Following a MOU with the Cancer Institute, Sri Matha Trust, a registered charitable institution with objects to serve poor and the sick belonging to all faiths, took the responsibility to manage this Dharmasala by raising resources on its own.

***In April 2008, completing ninetyone months of proven record of service with unwavering commitment, Sri Matha Trust has come a long way giving free food and shelter to more than one lakh of inmates!!*** Staying in our Dharmasala, the poor cancer victims have the benefit of free / heavily subsidized treatment at the renowned Cancer Institute and barring handful of exceptions, they have successfully managed their survival due to timely treatment.



V.KRISHNAMOORTHY
Founder & Managing Trustee
Sri Matha Trust
Mobile : 94440 01065

**Administrators:**

# Sri Matha Trust

**(Secular Charitable Institution for poor cancer patients)**


Admn. Office : "Guru Kripa", 3, Sastha Avenue, Thirumazhisai Street, Sundaram Colony, East Tambaram, Chennai - 600 059. INDIA.
Phone : 2239 4194, 2239 1065

Mohandevi Hirachand Nahar Rajasthani Dharmasala
Old Cancer Institute Premises, East Canal Bank Road, Gandhi Nagar, Adyar, Chennai-600020. Phone: 2442 0727 / 2440 4950


**Donations to Sri Matha Trust are exempt u/s.80(G)(5)(VI) of IT Act. 1961**

**Also Registered under Foreign Contribution (Regulation) Act - No.075901147**

## Shelter with facilities - for a most comfortable stay



Our Dharmasala is a four storey building with halls & rooms with attatched toilet. A professional contractor takes care of housekeeping of the premises satisfactorily. Continuous water and fan facility is ensured to minimise physical discomforts of the suffering patients. To relax from the body pain, cable TV network provides Tamil, Telugu & Hindi programmes catering to the needs of our inmates from different States. Evening Prayer before dinner, gives them hopes for early recovery and definite survival.



## Hygienic and tasty nutritious food - because they deserve the best



Sri Matha Trust makes no compromise on the standard of food. Starting with morning coffee, breakfast is served. For the lunch, it is a typical south Indian veg. menu with two vegetables followed by a cup of tea in the evening. For the dinner, the inmates are served with one variety rice, one vegetable and plain rice with "rasam" and buttermilk. Special diets are provided if prescribed - all these sumptuously and totally free for all the



patients!! It is our privilege to say that our kitchen had functioned from 6 a.m. to 9.30 p.m. daily for the past 2,765 days with no interruption, even for a single session.

## Seeking your donation to sustain the good work

A popular belief - ***God created the poor to test whether there is mercy in the hearts of the rich*** - truly, several good souls who can afford, have so far helped Sri Matha Trust to manage the expenses for the Dharmasala. Our mission to serve these "unfortunates' deserves to be sustained till the Sun & the Moon shine; it needs no further elaboration!!

## Our needs and your viable options

- To achieve this target, our Sri Matha Trust needs to create a Corpus Fund of Rs.3 crores.
- Kindly contribute Rs.1,00,000/- and be our life time "Patron" to serve this noble cause.
- Kindly donate Rs.60,000/- and be our "Donor" to sponsor for one day once annually forever.
- Kindly be a "Sponsor" by donating Rs.6,000/- for a day's programme or Rs.2500/- for a session of lunch or dinner or Rs.1500/- towards breakfast.
- Kindly spare Rs.600/- annually and adopt one patient for one day every month.
- Spare Rs.50/- and give food for one patient for one day.

**YOU MAY ALSO DECIDE AFTER A "VISIT" TO OUR DHARMASALA**

Cheques may be drawn in favour of "Sri Matha Trust" and mailed to our address

To extend your assistance, kindly contact : Sri Kamatchi Mani - 93848 33325
Ln. N Shanckaram - 93848 20727 | S.Rama - 93810 20727 | A.American - 93821 87957

# மஞ்சள் நிற மரண கேக்!

மருதன்

ஒருநாள் அரிசி சாதம் சாப்பிடா விட்டால் உயிரா போய்விடும்? போய் விடாது. ஆகவே ஒருநாள் விட்டு ஒருநாள் அரிசி வாங்குகிறார்கள் பங்களாதேஷ் மக்கள். அதுவும் சாத்தியம் ஆகாவிட்டால் வாரத்துக்கு ஒருமுறை, அல்லது மாதம் இருமுறை. அரைநாள் சம்பாத்தியம் கொடுத்தால்தான் இரண்டு கிலோ அரிசி வாங்க முடிகிறது. எனில், மற்ற செலவு களை எப்படிச் சமாளிப்பது? ஏமன் நாட்டிலும் இதே நிலைமைதான். ஒரே வித்தியாசம் அரிசிக்குப் பதிலாக ரொட்டி.

அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும்கூட கோது மையின் விலை, கடந்த ஆண்டு மட்டும் 120 மடங்கு அதிகரித்திருக்கிறது. அரிசி 75 சதவிகிதம். கடந்த மூன்று ஆண்டுகளில் உணவுப் பொருள்களின் விலை சற் றேறக்குறைய 83 மடங்கு அதி கரித்திருக்கிறது எனக் கண்டு பிடித்து அறிவித்திருக்கிறது உலக வங்கி. தற்போது உள்ள மக்கள்தொகைக்கு இன்னும் 500 மில்லியன் டாலர் கோதுமை, அரிசி தேவையாம். அப்போதுதான் நிலை மையைக் கட்டுக்குள் கொண்டுவர முடியும் என்கிறது அது.

இந்த நெருக்கடியைப் போக்க என்ன செய்யலாம் என்று உலகப் பொருளாதார மேதைகளும் சமூக விஞ்ஞானிகளும் ஒரு பக்கம் கருத்தரங்குகள் நடத்திக்கொண்டி ருக்கிறார்கள். மற்றொரு பக்கம், ஹைத்தி தேசத்து மக்கள் ஒரு மாற்று வழியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். 'விலைவாசி உயர்ந்துவிட்டதாம் கண்ணே' என்று குழந் தைகளிடம் பொருளாதார வகுப்புகள் எடுத்துக்கொண்டிருக்க முடியாது. 'ஆவா னப்பட்ட அமெரிக்காவிலேயே உணவு விலை அதிகரித்துவிட்டதாம்' என்று வரை படத்தை விரித்து வைத்து, கதை சொல்ல முடியாது.



'ஆகவே என் கண்ணே, இருப்பதை வைத்து திருப்தி அடைந்துகொள்வோம். இந்தா, இது ஒரு புது விதமான கேக்' என குழந்தைகளுக்குக் கொடுக்கத் தொடங்கி விட்டார்கள். என்ன அந்த கேக் என்று யோசிக்கிறீர்களா? கிட்டத்தட்ட ரொட்டி போலத்தான். மஞ்சள் வண்ண கேக் என்று இதனை அழைக்கிறார்கள். 'எத்தனை வேண்டுமானாலும் சாப்பிடு. இதன் ருசி அலாதியானது. ஆரம்பத்தில் உனக்குப் பிடிக்காமல் போனாலும், போகப் போகப்

பழகிவிடும். மட்டுமின்றி, நீ கேட்கும் போதெல்லாம் தயாரித்துத் தருகிறேன் அன்பே!' என்ற ரீதியில் ஹைத்தி மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஊட்டத் தொடங்கிவிட்டார்கள்.

'மஞ்சள் கேக், செய்வது மிகவும் சுலபம். களிமண் தெரியும்தானே? கை நிறைய அள்ளிக்











**'எத்தனை வேண்டுமானாலும் சாப்பிடு. இதன் ருசி அலாதியானது. ஆரம்பத்தில் உனக்குப் பிடிக்காமல் போனாலும், போகப் போகப் பழகிவிடும்'.**

கொண்டு வாருங்கள். பிறகு, கொஞ்சம்போல் நீர் ஊற்றிப் பிசைந்து கொள்ளுங்கள். சப்பாத்திக்குப் பிசைவதைப்போல, உருட்டி உருட்டி தட்டை தட்டையாகத் தட்டுங்கள். வெயிலில் காயப் போடுங்கள். உலர்ந்து முடித்த பின் அடுப்பில் வைத்து சிறிது நேரம் வாட்டுங்கள். பொன் மஞ்சள் நிறத்தில் முறுவலாக கேக் மலர்ந்து வரும்.

சில குழந்தைகளுக்கு இந்த கேக் ஒத்து வருவதில்லை. புகட்டிய சில மணி நேரங்களில் தொடர் விக்கல் வந்து இறந்து விடுகிறார்கள். என்ன செய்ய முடிகிறது நம்மால்? சாப்பிட எதுவும் கொடுக்காவிட்டாலும்கூட அவர்கள் நாளடைவில் இறந்துதானே போகிறார்கள்? அதற்கு மஞ்சள் கேக் எவ்வளவோ பரவாயில்லை, இல்லையா?'

# நெகடிவ் விளம்பரம் நியாயமில்லை!

*சிலபல கோடிகளுக்கு ஏலம்போன கிரிக்கெட் வீரர்கள் பற்றிய விவாதங்கள் இன்னும் சூடு ஆறாத நிலையில், 'சென்னை சூப்பர் கிங்ஸ்' அணியின் விளம்பரம் ஒன்று சர்ச்சையைக் கிளப்பி உள்ளது. 'தொடங்கிவிட்டது Twenty 20யின் மாபெரும் போர்முழக்கம். படை திரண்டு வாருங்கள்! கர்ஜிக்கத் தயாராகுங்கள்...' - டிக்கெட் விற்பனைக்கான விளம்பர வாசகம் இது. இதை நிராகரிக்கிறார்கள் இந்த இளைஞர்கள்.*



**கார்த்தி :**

ஒவ்வொரு மாநிலத்துக்கிடையேயும் ஏழாம் பொருத்தமாக இருக்கு. வீரர்கள் ஒவ்வொரு அணியா பிரிஞ்சு, வேற நாட்டு வீரர்களை அதுல இணைச்சு 'அவியல்' மாதிரி அணி அமைச்சிருக்காங்க. நாம படை திரண்டு போறதால, என்ன பெருமை கிடைக்கப் போகுது?



**ப்ரியதர்ஷினி :**

எதிர்பார்ப்பை ஏற்படுத்தி ஏமாத்தணும். இதுதான் இவங்க வேலை. 'போர்' அப்படீனா 'சாவு'ங்கிற விஷயம் கட்டாயம் இருக்கும். கற்பனைக்குக் கட்டுப்பாடு கிடையாதுதான்; அதுக்குன்னு இப்படியா?

திவ்யப்ரியா :

எப்படிச் சொன்னா மக்களுக்குப் போய்ச் சேரும்ங்கிறது மட்டும்தான் பார்க்கறாங்களே தவிர, அதனால என்ன பாதிப்புங்கறது பத்தி, யாருக்கும் அக்கறை இல்லை.



நித்யானந்தம் :

எல்லாமே இங்க வியாபாரம்தான். விளை யாட்டும் வியாபாரப் பட்டியலில்தான் இருக்கு. அதனாலதான் இந்த மாதிரி விளம்பரம் பண்றாங்க. சகோதரத்துவத்துக்குப் பாலமா இருக்கற தகுதி, விளையாட்டுகளுக்கு உண்டு என்கிறதையே மறந்து போயாச்சு!



சுரேஷ் :

விளையாட்ட விளையாட்டாத்தான் பார்க்கணும். கர்ஜிக்கும் அளவுக்கு இதுல என்ன இருக்கு? இவர்கள் கோடிகளில் உல்லாசமாகப் புரள்வதற்கு நாம் படை திரண்டு போகணுமா? அழைப்பு விடுக்கிற உரிமை அவர்களுக்கு இருக்கு என்பதற் காக இப்படிச் செய்யக் கூடாது.



நிவேதா:

இது நெகட்டிவ் தாட்ஸைக் கிரியேட் பண்ணும். அவங்க ரொம்ப கூலா விளையாடுவாங்க. ஆனா, நாம அதை வெறியோட பார்க்கணும். அதுக்காக எப்படி வேணாலும் விளம்பரப்படுத்துவாங்க. இதெல்லாம் எந்த ஊரு நியாயம்?



கிருத்திகா :

இதை 'வியாபாரத் தந்திரம்'னுதான் சொல்வேன். ஏற்கெனவே நமது பகுத்தறிவு ரசிகர்கள் வெறிபிடித் துத் திரிகிறார்கள். விளையாட்டை 'போர்' என்று கிரியேட் செய்வது, ரசிகர்களின் உணர்வைத் தூண்டுகிற செயல். எதற்கு இந்தப் போர் முழக்கம்?



– எம். திரவியமுருகன்



அபிராமிக்கு தினமும் பதினெட்டாவது மாடியிலிருக்கும் தன் அலுவலகத்துக்கு லிஃப்ட்டில் போவது ஒரு பெரிய சாதனையாக இருக்கிறது. பதினைந்தாவது மாடிவரை ஒன்றும் பிரச்னை இல்லை. பதினைந்திலிருந்து பதினெட்டை அடைவதுதான் அவஸ்தையாய்ப் போகிறது.

லிஃப்ட்டை இயக்கும் ஜேம்ஸ் அபியைவிட இரண்டு வயது சின்னவனாகத்தானிருப்பான். ஆனால், அபியென்றால் அப்படியொரு விருப்பம் அவனுக்கு. அதனைக் காதலென்று அவளிடமே அவன் சொல்லிக்கொள்வதில் தான் அவளுக்கு தர்ம சங்கடம்.

பதினைந்தாவது மாடிவரை லிஃப்ட்டில் கூட யாரேனும் இருப்பார்கள் - அத்தனையும் பரபரப்பான அலுவலகங்கள். அபி வேலை செய்யும் நிறுவனமே அதில் ஐந்து மாடிகளை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. பதினாறு, பதினேழில் அதே நிறுவனத்துக்குச் சொந்தமான ஜிம், தியான அறைகள் இருந்ததால் காலையில் அவள் அலுவலகம் வருகிற நேரம் அநேகமாய் அவை காலியாகத்தானிருக்கும். பதினெட்டில் நிர்வாக இயக்குநரின் அறை. அபி அவருக்குச் செயலராக இருப்பதால் அவருக்கு முன் வந்து அவரது நாளை ஒழுங்கு படுத்த மெனக்கெடுவதில்தான் ஜேம்ஸிடம் மாட்டிக் கொண்டு அவதிப்பட வேண்டியிருந்தது.

தனக்கு இன்னும் இரண்டு மாதத்தில் திருமணமாகப் போவது தெரிந்தும், ஏன் இந்த ஜேம்ஸ் இப்படி நடந்து கொள்கிறான் என்பது அபிக்கு என்றைக்கும் புரிந்ததில்லை. நாலைந்து மாதங்களுக்கு முன் சட்டென்று ஒருநாள் லிஃப்ட்டில் தனியாக இருந்த நேரத்தில், ''நான் உங்களை ரொம்ப லவ் பண்றேன் மேடம்'' என்றான்.

அபி அதிர்ந்து, அவன் ஏடாகூடமாய் ஏதோ செய்யப் போகிறான் என மிரளலாய்ப் பார்க்க, ''என்ன மேடம், ஏதோ கத்தி எடுத்துக் குத்த வர்ற மாதிரி இப்படிப் பயப்படறீங்க?'' என்று சாவகாசமாய்க் கேட்டான். அதற்குள் பதினெட்டாவது மாடி வந்துவிட, தாமதமேதும் செய்யாமல் கதவைத் திறந்துவிட்டான்.



அன்று முழுவதும் அபிக்கு ஜேம்ஸை எப்படிக் கையாள்வதென்ற குழப்பம். நிர்வாகத்தில் புகார் செய்து நீக்கச் சொல்லிவிடலாம். ஆனால், திடுமென அப்படிச் செய்து அவன் வாழ்க்கையைக் கெடுக்கத் தயக்கமாயிருந்தது.

இத்தனை நாளாக இல்லாமல் இப்படித் திடீரென இன்று சொன்னதால் ஒரு வேளை மனநிலை ஏதும் பிசகி இருக்குமோ என்று கூடத் தோன்றிற்று. மீண்டும் அப்படி ஏதாவது உளறினால் யோசித்துக் கொள்ளலாம் என தீர்மானம் செய்து கொண்டு

வேலையில் கவனம் செலுத்த முற்பட்டாலும், பின்புலத்தில் ஜேம்ஸ் வாய் ஓயாமல் பேசிக் கொண்டேதானிருந்தான்.

அடுத்தடுத்து வந்த நாட்களிலும் சமயம் கிடைக்கும் போதெல்லாம், ''ஒரு நாள் உங்களைப் பார்க்காட்டாலும் என்னவோ போல இருக்கு, மேடம்.''

''இந்த டிரஸ் உங்களுக்கு ரொம்பப் பொருத்தமா இருக்கு மேடம்.''

''ஆண்டவன் எனக்கு ஒரு வரம் கொடுத்தா நாளெல்லாம் உங்க முகத்தை மட்டும் பார்த்துக்கிட்டே இருக்கணும்னுதான் கேட்பேன்.''

இப்படி ஏதாவதொரு உளறல் தினமும். ஆனால், பார்க்கிற பார்வையிலோ நடந்து கொள்ளும் விதத்திலோ துளியும் கல்மிஷம் இருக்காது. அவனின் வெகுளித் தனமும் ஏழ்மையும் அவளை அவன் மேல் புகார் செய்ய விடாமல் தடுத்தன.

அபி சில நாட்கள் அவன் பிதற்றலுக் குப் பதிலாய் முறைத்துப் பார்த்தாள்; சில நாட்கள் அலட்சியப்படுத்திப் பார்த்தாள்; சில நாட்கள் தவிர்த்துப் பார்த்தாள். ஆனால் எதுவுமே வேலை செய் யாததால் ஒரு நாள், ''எதுக்கு இப்படி தத்துப் பித் துன்னு உளறிட் டிருக்கீங்க? எனக்குக் கல் யாணமாகப் போகுது'' என்றாள் எரிச்சலோடு.

''அதனால என்ன மேடம்? நான் உங்களை எப்பவும் லவ் பண்ணுவேன். நீங்க கல்யாணம் ஆகி, பிள்ளை பெத்து,

நிலா

கூன் விழுந்த கிழவியா ஆனா, கூட லவ் பண்ணுவேங்க மேடம்'' அவன் துளியும் வருத்தமோ தயக்கமோ இல்லாமல் சிரித்துக்கொண்டே சொல்ல,

''இப்படிப் பேத்தறதைவிட்டுட்டு சீக்கிரம் கல்யாணம் செஞ்சுக்கங்க. புத்தி தெளியும்'' சற்று கடுமையாகவே அபி சொல்லிவிட்டுப் போனாள். ஆனால் ஒன்றும் பிரயோசனமில்லை.

இதோ இன்றைக்குக்கூட,

''மாப்பிள்ளை என்ன படிச்சிருக்காரு, மேடம்? ஃபோட்டோ கொண்டு வந்திருக்கீங்களா?''

''கல்யாணப் புடைவை ஆரஞ்சுக் கலர்ல எடுங்க மேடம். உங்களுக்கு அந்தக் கலர் சூப்பரா இருக்கும்.''

அவன் முகத்தைக் கல்லாய் வைத்துக் கொண்டு காதில் விழாதது போல இருந்தாள்.

''மேடம், உங்க கல்யாணப் பத்திரிகையை, வாட்ச்மேன் கிட்டருந்து வாங்கிப் பாத்தேன் மேடம். நல்லாருக்குது. என்ன, நீங்களும் அவரும் என்ன படிச்சிருக்கீங்கன்னு போட்டிருக்கலாம்'' மேதாவித்தனமாய்ச் சொன்னான்.

திருமணம் முடிந்த பிறகு கணவர் ஊரான மதுரைக்கு மாற்றலாகிப் போனாள் நிலா. ஒன்றரை வருடங்கள் உருண்டோடின. அழகான பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். மதுரையிலிருந்து, நீண்ட நாட்களுக்குப் பிறகு அலுவலக வேலைகாரணமாக அன்றுதான் முதன் முதலாய் அலுவலகம் வருகிறாள். லிஃப்டுக்குக் காத்திருக்கையில் ஜேம்ஸ் தொண தொணவெனக் கேள்வி கேட்பானென அலுப்பாய் இருந்தது. லிஃப்டில் அவன் இல்லாததைக் கண்டு அவன் விடுமுறையில் இருப்பானென எண்ணிக் கொண்டாள். அடுத்த நாளும் அதற்கடுத்த நாளும்கூட அவன் வராததைக் கண்டு வாட்ச் மேனிடம் விசாரித்தபோது, ''அவங்க மாமா கடை வச்சுக் கொடுத்தாருன்னு வேலையை விட்டுட்டான் மேடம்'' என்றார்.

அபிக்கு ஊசி முனையளவு மனசுக்குள் வெற்றிடம் விழுந்ததை உணர்ந்து கொள்ள முடிந்தது.

## சூர்யாவின் கடைசி படம்!

**''தெ**லுங்குல பவன் கல்யாணை வச்சு 'புலி' படம் பண்றேன். இன்னொரு ஹீரோவை வச்சு நான் டைரக்ட் செய்ற கடைசி படம் இதுதான்'' என்கிறார் எஸ்.ஜே.சூர்யா. அது மட்டுமல்ல, இனி தம் படங்களில் பழைய சூர்யாவைப் பார்க்க முடியாதாம். பழைய சூர்யா என்றால்? ''க்ளாமர், ரொமான்ஸ்னு நான் ஒரு ஸ்டைல் ஃபாலோ பண்ணேன். மக்களுக்கு அது பிடிக்கல. இனி அவங்க வழியிலே போகப் போறேன். இப்ப 'நியூட்டனின் மூன்றாம் விதி' படம் பண்றேன். இது அழகான காதல் கதை. அதிரடி சண்டைக் கதை. இரு வேறுபட்ட கலவையா படம் இருக்கும். ஜனங்களுக்குப் பிடிச்ச மாதிரியான ஒரு சினிமாவா இது கண்டிப்பா இருக்கும். கூடுதல் மேட்டர், இதுல நான் மொட்டை போட்டுக்கிட்டது'' என்கிறார்.

– மீரா





சேனல்

**கிராமத்து மண் வாசனையை தமிழ் சினிமாவில் படரவிட்ட பாரதிராஜா, தொலைக் காட்சியில் தம் பங்களிப்புக்குத் தயாராகிவிட்டார். அவரிடம் பேசினோம்.**

“ஆரம்ப காலத்துல 'சின்னத்திரையால சினிமா பாதிக்கும்'னு சொன்னவன்தான் நான். ஆனா அது உண்மை கிடையாதுன்னு இப்ப உணர்ந்துட்டேன். சின்னத்திரை தன்னோட அபரிமிதமான வளர்ச்சியைத் தொட்டுட்டிருக்கிற அதே நேரத்துல சினிமாவும் உச்சபட்ச உயரத்தை நோக்கி கம்பீரமா நடைபோடுது.

சின்னத்திரை மேல எப்பவும் என் கனிவும் கவனமும் இருந்திருக்கு. இப்பக் கூட என் முழு விருப்பத்தோடுதான் நான் இங்க வந்திருக்கேன். இங்க எனக் குப் பிடிச்ச விஷயம் நேரம். 2¼ மணி நேரத்துல எல்லாத்தையும் சொல்லிடணும்ங்கற தவிப்பு இல்ல. நாம உள்வாங்கியதை, உணர்ந்ததை ஆசுவாசமா, ஆழமா தர்ற சுதந்திரம் நமக்கிருக்கு. இது பெரிய கொடை. என்னோட 'தெற்கத்திப் பொண்ணை' இந்த அழகியலோடுதான் நான் வடிவமைச்சிருக்கேன். வழக்கமான சீரியலா இது இருக்காது. எந்த சட்டதிட்டத்துக்குள்ளும் சிக்க விரும்பாதவன் நான்.

**புதுசா ஒரு இயற்கையை எப்படி சினிமாவில் நிர்மாணிச்சேனோ அதைவிட இயற்கையா ஒரு புது விஷயத்தை சின்னத் திரையில் அரங்கேற்றி இருக்கேன்.**

மூணு கிராமத்தைச் சேர்ந்த மூணு குடும்பங்களோட உயிர் சுவாசம்தான் கதை. தலைமுறை தலைமுறையா அவங்களுக்குள் நடக்கற பாசப் பிணைப்பும், பங்காளிப் போராட்டமும், காதல் நெகிழ்வும், உறவுச் சிக்கலும், உணர்வு நுட்பமும் தான் திரைக்கதையா மலர்ந்திருக்கு. நகர்ப்புறப் பெண்கள் சம உரிமை வேண்டி சட்ட திட்டம் போட்டுச் செயல்

# “நான் உணர்ந்த உண்மை!”



# - மனம் மாறிய பாரதிராஜா



படறதும் அதுக்காக பல விலை கொடுக்கறதும் இங்க சகஜம். ஆனா, கிராமத்துப் பெண்கள் எந்தவிதமான நிர்ப்பந்தமும் இல்லாம ஆணும் பெண்ணும் சமம்ங்கறதை இயல்பாகவே பாவிக்கறாங்க. பாசமானாலும் சரி, கோபமானாலும் சரி அவங்கள மிஞ்சினவங்க யாரும் கிடையாது. முடிவெடுத்துட்டா, எந்த விஷயத்தாலயும் கட்டுப்படுத்த முடியாத காட்டாற்று வெள்ளம் அவங்க. இந்தச் சாயல்களோடு படைக்கப்பட்டவதான் என் 'தெற்கத்திப் பொண்ணு.'

தேனி, கம்பம், ஆண்டிப்பட்டின்னு பசுமை பாய் விரிச்சுத் தூங்கற இடங்கள்லதான் படப்பிடிப்பு நடத்தியிருக்கோம். என் மக்களான நெப்போலியன், சந்திரசேகர், ரஞ்சிதாவோடு சொர்ணமால்யாவும் சேர்ந்து வாழ்ந்திருக்காங்க. எப்பவும் அடுத்தவங்க கதையை வாங்கி, செதுக்கிச் சிங்காரிக்கறதுதான் என் வழக்கம். இந்த முறையும் அந்த மரபை மீறாம ரத்னகுமார் படைப்போட வந்திருக்கேன். முக்கியமான விஷயம், இளையராஜா இசை. என் படங்களோட வெற்றிக்கு அவரோட பாட்டுங்க பக்கபலமா இருந்திருக்கு. இப்ப என் சீரியலுக்கும் தனித்தன்மையோடு தவமா கிடைச்சிருக்கார். என் வாழ்க்கை மேல அவருக்குத் தீராத அக்கறை எப்பவுமே உண்டு. அதே போலதான் நானும். ரெண்டு பேரும் இணைஞ்சா சந்தோஷத்துக்குக் கேக்கணுமா என்ன? தொலைக்காட்சி சீரியல் வரலாற்றில் இந்தப் படைப்பு ஒரு மைல் கல்லா அமையப்போறது உறுதி'' என்கிறார் பாரதிராஜா. 'தெற்கத்திப் பொண்ணு' சித்திரைத் திருநாள் முதல் கலைஞர் டி.வி.யில் ஒளிபரப்பாகி வருகிறது.

**- ஆ.முத்துராமலிங்கம்**

* 'தெற்கத்திப் பொண்ணு' தொடரில்...

**வ**கைவகையாய்ப் பட்டங்கள் பெற்றாலும், விதவிதமாய் வேலைவாய்ப்புகள் இருந்தாலும், இந்தியாவில் எப்போதுமே வேலையில்லாத் திண்டாட்டம்தான். ஆனால், நம் அண்டைநாடுகளில் ஒன்றான ஜப்பானின் கவலையோ வேறுவிதமாய் இருக்கிறது. அந்த நாட்டின் மக்கள் தொகை கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்துகொண்டே வருகிறது. இன்னும் ஐம்பது வருஷங்களில் எண்ணிக்கை பாதியாகிவிடும். அதன் பிறகு இருக்கிற வேலைகளையெல்லாம் எப்படிச் செய்து முடிப்பது?

ஆனால் அதற்கான தீர்வும் அவர்களின் கையில் இருக்கிறது. ரோபோ என்கிற எந்திர மனிதர்கள்தான் அந்தத் தீர்வு.

வயதானவர்களையும் குழந்தைகளையும் கவனித்துக்கொள்வது, அவர்கள் குளிப்பதற்கு உதவுவது, சப்தம் போட்டு புத்தகங்கள் படித்துக் காட்டுவது என்று சகல வீட்டுவேலைகளையும் ரோபோக்களைக் கொண்டே செய்து முடிக்க ஏற்பாடாகி வருகிறது. இதன்மூலம் சீனியர், ஜூனியர் சிட்டிஸன்களைக் கவனித்துக் கொள்ள வேலைக்காரிகளைத் தேடி

# உலகே மாயம்!



## 'அறுவை'க்கு அரை டஜன்!

**உ**ங்கள் இரு சக்கர அல்லது நான்கு சக்கர நண்பனை(!) ஒர்க் ஷாப்புக்கு கூட்டிக்கொண்டு போயிருப்பீர்கள். அங்கு நான்கைந்து வாகனங்களை ஒரே நேரத்தில் கழட்டிப் போடுவார்கள். கொஞ்சம்கூடக் குழப்பம் இல்லாமல் அனைத்தையும் ஒரே நேரத்தில் மீண்டும் பொருத்தி இயக்குவார்கள்.

இந்த ஸ்டைலைப் பின்பற்றி, அரை டஜன் ஆபரேஷன்களை ஒரே நேரத்தில் நடத்தியிருக்கிறது அமெரிக்காவின் பிரபலமான ஹாப்கின்ஸ் மருத்துவமனை.

கிட்னிமாற்று அறுவை சிகிச்சை செய்து கொள்ளக் காத்திருந்தவர்கள் ஆறு பேரைப் பிடித்து ஒரே நேரத்தில் படுக்க வைத்து வெற்றிகரமாக ஆபரேஷனை முடித்திருக்கிறார்கள்! ஆறு அறைகள், ஒன்பது மருத்துவக் குழுக்கள், பத்து மணி நேரம். அவ்வளவுதான்.

## தூக்கம் இல்லாத நடிகைகள்

**நீ**திமன்றம், வழக்கு, தண்டனை இவையெல்லாம் இல்லாமல் போனால் ஹாலிவுட் நடிகைகளுக்குத் தூக்கமே வராதோ என்னவோ?

லேட்டஸ்ட் வழக்கு லிண்ட்சே லோகனின்மீது...

வழக்குத் தொடுத்திருப்பவர் அவரது மாஜி மெய்க்காவலர் டேவிட் குப். ஒரு வருஷத்துக்கு முன்பு தாம் பார்த்த வேலைக்கு இன்னமும் சம்பளம் தரவில்லை என்று லோகனின்மீது குற்றம் சாட்டியிருக்கிறார்.

ஹாலிவுட் நடிகை, பாப் பாடகி, பார்ட்டி கேர்ள் என்று தன் சகபோட்டியாளர்களான பாரிஸ் ஹில்டனுக்கும், நிக்கோலே ரிச்சிக்

அலையவேண்டிய தொல்லைகள் இல்லை.

இம்முறையை அறிமுகப்படுத்துவதன் மூலம் 2023ஆம் ஆண்டுக்குள், மூன்றரை லட்சம் பேரின் வேலைகள் ரோபோக் களிடம் கைமாறிவிடுமாம். எனவே, அவற்றின் செயல்திறனை அதிகரிக்கும் முயற்சிகள் விறுவிறுப்பான வேகத்தில் நடந்துகொண்டிருக்கின்றன.

என்னமாய் யோசிக்கிறார்கள்! இந்த நிலை நீடித்தால், ஜப்பானில் ரோபோக்கள் கூட இனி வேலை தேட நேரலாம்!



# வேலை தேடும் ரோபோக்கள்!

கிட்னிதானம் பெற்ற ஆறுபேர், அதைக் கொடுத்த ஆறுபேர் என்று ஒரு டஜன் பேரும் நலம் என்கிறது மருத்துவமனை அறிவிப்பு.

அவசர அவசரமாக ஆபரேஷன் நடக்கும்போது எசகுபிசகாக ஏதாவது நடந்துவிட்டால் என்னாவது என்ற பயம் நியாயமானதுதான். இருந்தாலும், அமெரிக்காவில் இந்த முயற்சிக்கு ஏக வரவேற்பு. ஏனெனில், அந்நாட்டில் கிட்னி தானம் பெறுவதற்காகக் காத்திருப்பவர்களின் பட்டியல் ஒரு லட்சத்தை நெருங்குகிறது!



தும் முடிந்தவரை ஈடுகொடுக்கிறார் லோகன். அதற்காக அவர்களைப் போலவே போதையில் மிதந்தபடி காரோட்டுவது, அதன் காரணமாக லைசன்ஸ் பறிப்பு, கோர்ட், கேஸ் என்று அலைவது என்று ஒரே ஸ்டைலைப் பின்பற்ற வேண்டுமா என்ன?

அப்புறம், மெய்க்காவலரின் வேலைதான் என்ன என்று கேட்கிறீர்களா?

நிழல்போல் பின்தொடரும் பத்திரிகையாளர் களிடமிருந்து தப்பிக்க வழி செய்வது, விழாக் களிலும் விருந்துகளிலும் கூடவே நின்று போஸ் கொடுப்பது, அவ்வளவுதான்..! 'அதற்காக, துட்டு இல்லாமல் வேலை பார்க்கவா முடியும்?' என்று கேட்கிறார் டேவிட் குப்.

நியாயம்தானே!

- ஸாந்த்

தமிழ்நாட்டில் இருக்கும் ஜிலுஜிலு பிரதேசம் பிச்சாவரம்! நான்காயிரம் ஓடைகள் சங்கமிக்கும் அதிசய பிராந்தியம்! பெயர்தான் பிச்சாவரமே ஒழிய, இயற்கை எழிலை வரமாகப் பெற்ற பிராந்தியம். எங்கே இருக்கிறது இந்த பிச்சாவரம்?

கடலூர் மாவட்டம் சிதம்பரத்திலிருந்து வெறும் பதினேழு கிலோமீட்டர் பயணம் செய்தால், பிச்சாவரத்துக்குள் பிரவேசித்துவிடலாம். சென்னையிலிருந்து சற்றேறக்குறைய இருநூற்றைம்பது கிலோமீட்டர் தூரம். டிக்கெட் வெறும் எழுபத்தைந்தே ரூபாய்தான். கொஞ்சம் சொகுசாகப் போகலாம் என்றால் ஏர் பஸ்கள் வரிசை கட்டி நிற்கின்றன.

சிதம்பரத்திலேயே தங்குவதற்கு இடம் பார்த்துக்கொள்வது உசிதம். வசதியானது, நடுத்தரமானது, சொகுசானது என்று ரக வாரியாக விடுதிகள் சிதம்பரத்தில் இருக்கின்றன. நம்முடைய வசதிக்கேற்ப பிடித்துக்கொள்ளலாம். பிச்சாவரத்திலும் தமிழ்நாடு சுற்றுலாத்துறைக்குச் சொந்தமான விடுதிகள் இருக்கின்றன. ஆனால், முதலில் வருபவர்களுக்கே முன்னுரிமை.

சிதம்பரத்திலிருந்து பிச்சாவரத்துக்கு பேருந்தில் போவதுதான் சரியான வழி. டிக்கெட் ஏழு ரூபாய். பேருந்துப் பயணம் சரிப்படாது என்றால் நமக்கு வசதிப்பட்ட பிற வாகனங்களிலும் பயணிக்கலாம். என்ன ஒன்று, சிதம்பரத்திலிருந்து புறப்பட்டு சில கிலோமீட்டர்கள் கடந்த பிறகு, ஒரு கட்டத்தில் பாதை





வெகு குறுகலானது. கொஞ் சம் சிரமப்பட்டுந்தான் அதன் வழியே போக வேண்டியிருக் கும்.

பேருந்திலிருந்து இறங்கியதும் நீங்கள் முதலில் செல்ல வேண்டிய இடம் படகுத்துறைதான். அங்கே படகுகள் தயாராக இருக்கும். ஒரு படகில் அதிகபட்சம் ஐந்து பேர் ஏறிக் கொள்ளலாம். படகுத்துறையிலிருந்து ஐந்நூறடி பயணித்தால், சதுப்பு நிலக்காடு களின் தரிசனம் கிடைத்துவிடும். திட்டுத் திட்டாக சுரபுன்னை மரங்களைப் பார்க்க முடியும். வழக்கமாக மற்ற டூரிஸ்ட் ஸ்பாட்டு களில் போட்டிங் செல்வதற்கும் பிச்சாவர போட்டிங்குக்கும் மிகப்பெரிய வித்தி யாசம் இருக்கிறது. இங்கு மட்டுமே சதுப்பு நிலக்காடு களை தரிசனம் பண்ணலாம்.

என்ன? எங்கேயோ



# மணி நேரத்துக்கு ஓர் அதிசயம்!

படித்த விஷயம் போல இருக்கிறதா? யெஸ். பாடப்புத்தகங்களில் படித்த அதே மாங்குரோவ் காடுகள்தான். கடலோரத்தில் உவர் நீர் உட்புகுந்து தேங்கும் நீர்ப்பரப்பில் வளரும் அதிசய மரங்கள் இவை. நீர்ப்பரப்புக்கு மேலே நீட்டிக் கொண்டிருக்கும் வேர்களில் நிறைய துவாரங்கள் இருக்கும்.

இன்னொரு விஷயம் தெரியுமா? இந்தியாவில் வெறும் இரண்டே இடங்கள்தான் மாங்குரோவ் காடுகளுக்குப் பிரசித்தம் பெற்றவை. ஒன்று, கல்கத்தாவில் இருக்கும் சுந்தரவனக் காடுகள். அடுத்தது, நம்முடைய பிச்சாவரம்.

ஒரு காலத்தில், சிதம்பரம் பகுதியில் இந்த சுரபுன்னைக் காடுகள் நிரம்பிக் காணப்பட்டன. தில்லை மரங்கள் என்றறியப்படும் இத்தாவரங்களே சிதம்பரத்துக்கு தில்லைவனம் என்ற பெயரை ஏற்படுத்தின.

'ஒவ்வொரு சுரபுன்னை மரமும் இரண்டு ஆள் உயரத்துக்கு இருக்கும். மரங்களுக்கு அடியில் நண்டுகள் தலை காட்டும்' என்று மாங்குரோவ் காடுகளைப் பற்றி, தேர்ந்த அறிவியல் பேராசிரியராக மாறி, படகோட்டியே லெக்சர் கொடுத்தபடி துடுப்பு போடுவார். மரங்களுக்கு நடுவே நாம் செல்லும் படகுச் சவாரி ஒரு சிலாகிப்புக்குரிய அனுபவம்.

**குடும்பத்தோடு படகு சவாரி செய்ய நூற்றைம்பது ரூபாய். ஜோடியாகச் செல்ல ஆசைப்பட்டாலும் அதே கட்டணம்தான்!**

பிச்சாவரம் நீர்ப் பரப்புக்குள் கடல் நீர் திடீரென புகுந்து வரும். அதுவாகவே திரும்பப் போய் விடும். ஆறு மணி நேரத்துக்கு ஒருமுறை இந்த அதிசயம் நடந்துகொண்டே இருக்கும். நீர்ப்பரப்பின் ஆழம் ஆளுயரத்துக்கு இருக்கும்.

பிச்சாவரத்தில் குட்டிக்குட்டியாகச் சில தீவுகள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று சின்ன வாய்க்கால் தீவு. சூரிய உதயத்தையும் அஸ்தமனத்தையும் இந்தத் தீவிலிருந்து ரசிப்பது, கன்னியாகுமரிக்குச் சென்று வந்த திருப்தியைக் கொடுக்கும்.

பிச்சாவரத்தில் இருக்கும் மரங்களுக்கும் செடிகளுக்கும் மருத்துவ சக்தி உண்டு என்பது ஒரு நம்பிக்கை. இப்படிப்பட்ட மரங்கள் இருக்கும் இடத்தில் பறவைகளுக்குப் பஞ்சம் இருக்குமா என்ன? சுமார் இருநூறு வகை பறவைகளை (குறிப்பாக நீர்ப் பறவைகள்) இங்கு பார்க்க முடியும். அந்தப் பறவைகளின் விதவிதமான குரல்களைக் கேட்டு ரசித்தபடியே நீரில் மிதக்கலாம். நீர்ப்பரப்பில் மீன்களும் தென்படும். இவை உவர் நீர், நதி நீர் இரண்டிலும் உயிர் வாழக் கூடியவை!

சூரிய உதய அல்லது அஸ்தமன நேரத்தில் பறவைகளின் கூச்சலும் சிறகடிப்பும் உச்சபட்சமாக இருக்கும். அந்தி நேரத்தில் வெள்ளை பாராசூட்கள் போல் அவை செங்குத்தாக வந்து திட்டுகளில் அமர்வது கண் கொள்ளாக் காட்சி. மதிய உணவு முடித்து பிச்சாவரம் செல்லுங்கள். பறவைகள் வீடு திரும்பும் 'ஈவினிங் ஷோ'வைப் பார்த்துத் திரும்புங்கள்! ஆறு மணி நேர அதிசயம் அது!

— **கலை**

# அருள்வாக்கு

நாம் எப்படி இருக்கிறோம்? எப்போதும் எல்லையில்லாத தேவைகளோடு இருக்கிறோம். பரமாத்மா ஒரு தேவையும் இல்லாமல் இருக்கிறார். இத்தனை தேவையுள்ள நாம், அற்ப சக்தியோடு இருக்கிறோம். ஒரு தேவையும் இல்லாத பரமாத்மாவோ சர்வசக்தராக இருக்கிறார். நாம் ஒரே பள்ளமாக இருக்கிறோம். அவர் பரம உன்னதமாக இருக்கிறார். அவர் சக்தியிலும் ஞானத்திலும் மட்டும் உயர்ந்தவர் என்பதில்லை; தயையிலும் உயர்ந்தவராக இருக்கிறார். அதனால்தான் அவரைத் தியானித்தால் பள்ளமாக இருக்கிற நம்மையும் தூர்த்து நிரப்பச் செய்கிறார். நாம் குறைந்தவர்கள், அவர் நிறைந்தவர். நம் குறையைத் தீர்த்து நிறைவாகச் செய்யச் செய்ய அந்த நிறைவால்தானே முடியும்? அப்படிச் செய்கிற கருணாமூர்த்தி அவர். நாம் உபாசித்தால், நம் குறைகளைப் போக்குகிறார்.

குறை இருக்கிறது என்றால், எதுவோ தேவைப்படுகிறது என்று அர்த்தம். அடியோடு தேவையே இல்லாவிட்டால் அப்படியே நிறைந்துவிடலாம். நம் குறைகளை நிவிருத்தி செய்கிற பரமாத்மா, கடைசியில் நமக்கு எதுவும் தேவையே இல்லை என்கிற நிறைவையும் தந்துவிடுவார். அப்போது, அந்த உயர்ந்த மேடு நம்மைத் தூர்த்துத் தூர்த்து, பள்ளமாயிருந்த நாமும் அதோடு அதாகவே, சமமாக நிற்போம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

# நிறைவு!



# டாக்டர். சிரிஞ்சீவி இன்! பேஷண்ட் அவுட்!

"'நோய்க்கியா' ஹாஸ்பிடல்ஸ் உங்களை அன்புடன் வரவேற்கிறது' என்ற பிரம்மாண்டமான பெயர்ப் பலகையைப் பார்த்ததுமே முருகேசனுக்கு வியப்பு! நம்ம ஏரியாவுல இம்புட்டு பெரிய ஆஸ்பத்திரியா? எப்ப ஆரம்பிச்சாங்க, எப்ப கட்டி முடிச்சாங்கன்னே தெரியலையே...! உள்ள நுழையலாமா வேண்டாமா? - அவன் மனத்துக்குள் ஒரு 20 - 20 நடந்து கொண்டிருந்தது.

'அடேய் முருகேசா! வெயில்ல போய்ட்டு வந்து வெவரங்கெட்டத்தனமா ஐஸ் வாட்டரு குடிச்சதால வந்த அல்ப ஜல்பு. இதுக்குப் போயி இந்த மல்ட்டி பிளக்ஸ் ஆஸ்பத்திரி தேவையா?' - மனசாட்சி குரல் விட்டது.

'வந்ததுதான் வந்தோம். ஆஸ்பத்திரியை எப்படிக் கட்டியிருக்காங்கன்னு சுத்திப் பார்த்துட்டாவது போகலாம்' என்று தோன்றவே, உள்ளே நுழைந்தான். தீபிகா படுகோனே போலிருந்த ரிசப்ஷனிஸ்ட் பார்த்த பார்வையில் குளுகோஸ் குடித்த தெம்பு கிடைத்தது. விவரங்கள் கேட்டு, கணினியில் ஏற்றிக்கொண்டாள். எங்கிருந்தோ டிஜிட்டல் கேமரா ஒன்றை உருவி, க்ளிக் செய்தாள். அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் ஐ.டி. கார்டு ரெடி.

'அடப்பாவிகளா, விட்டா இந்தக் கார்டை கழுத்துல நிரந்தரமா மாட்டி, இந்த ஆஸ்பத்திரியிலயே வார்டு பாயா வேலைக்குச் சேர்த்துடுவாங்க போல!'

"சிரிஞ்சீவியோட கால்ஷீட் கிடைச்சிருக்கு."

'என்னது கால்ஷீட்டா? என்னடா இது இப்படிக் குழப்புறாங்க' - மனத்துக்குள் நினைத்துக்கொண்டே நாற்காலியில் சென்று உட்கார்ந்தான் முருகேசன். டாக்டர். சிரிஞ்சீவி இன், பேஷண்ட் அவுட் - என்றொரு போர்டு அந்த அறை வாசலில் நக்கலாகத் தொங்கிக்கொண்டிருந்தது.

அரை மணி நேரக் காத்திருப்பு. உள்ளே வரச்சொல்லி அழைத்தாள் நர்ஸ் ஒருத்தி.

"வாங்கோ, வாங்கோ, என்ன ரொம்ப சோர்வா வர்றீங்க? தலை சுத்துதா? மயக்கம் வரணுமே? நெஞ்சடைக்கிற மாதிரி இருக்கா? வேண்டாம் உட்காராதீங்கோ. அங்க போய்ப் படுங்கோ. செக் பண்ணிடலாம்" - அதிர்ந்து போனான் முருகேசன். அவனை வலுக்கட்டாயமாகப் படுக்க வைத்தாள் அந்தக் கிரீட தொப்பி நர்ஸ்.

"நல்லா மூச்சை இழுத்து விடுங்கோ." - ஸ்டெதஸ்கோப்பை மூக்கின் மீது வைத்தபடியே சொன்னார் டாக்டர். "உங்க மூச்சோட ஸ்வரமே சரியில்லையே. ஸ்ருதி தப்புதே. எதுக்கும் ஒரு மாஸ்டர் செக்-அப் செஞ்சுக்கோங்க."

"எ...எதுக்கு டாக்டர்?" - மிரண்டு போய்க் கேட்டான் முருகேசன்.

"அட, பயப்படாதீங்கோ. உங்க பைக்கை அப்பப்போ வாட்டர் சர்வீஸ் பண்ணுறதில்லையா?! உடம்பும் அப்படித்தான். மாஸ்டர் செக்-அப் செஞ்சுக்கிட்டீங்கன்னா, உங்களுக்கு நல்லது. எங்களுக்கு ரொம்ப நல்லது."

"அய்யோ டாக்டர், எனக்கு என்ன வியாதின்னு நான் சொல்லவே இல்லையே."

"தேவையே இல்லை. என்னென்ன வியாதி இருக்குன்னு தெரிஞ்சுக்கற

தைவிட, உங்க உடம்புல என்னென்ன வியாதி இல்லைன்னு தெரிஞ்சுக்கிட்டா நல்லதுதானே'' டாக்டர் குஷியாகச் சொல்ல, நர்ஸ் ஒரு அட்டையை நீட்டி விளக்கம் கொடுக்க ஆரம்பித்தாள்.

''முதல்ல, பட்ஜெட் செக்-அப். சுகர், பிபீ, யூரின், ஹெச்ஐவி மாதிரி சில பேஸிக் செக்-அப் செஞ்சு விடுவோம். ஒன்லி த்ரி தௌஸண்ட் ருபீஸ். அடுத்தது க்ளாஸிக் செக்-அப். இதுல எக்ஸ்ட்ராவா, உடம்பு முழுசும் எக்ஸ்ரே, ஸ்கேனிங் எல்லாம் பண்ணுவோம். சார்ஜ் ஒன்லி சிக்ஸ் தௌஸண்ட். மூணாவது எக்ஸிக்யூட்டிவ் செக்-அப். இதுல உங்களுக்கு ஒண்ணுமே இல்லேன்னாகூட, நீங்க எங்க விரும்புறீங்களோ அங்க ஒரு ஆபரேஷன் பண்ணிவிடுவோம்.''



முருகேசனுக்கு வியர்த்தது.

''டாக்டர், பேஷன்டுக்கு வியர்க்குது. இவரோட வியர்வையை டெஸ்டுக்கு அனுப்பிடலாமா?'' நர்ஸ் ஆர்வமாகக் கேட்டாள்.

''கண்டிப்பா செஞ்சே ஆகணும். ''

''சார், பேஷன்ட் ரொம்ப லக்கி ஸார்! பர்ஸ்ட் ஃப்ளோர்ல த்ரீ ஸ்டார் டீலக்ஸ் ரூம் காலியா இருக்கு. இவரை அங்க அட்மிட் பண்ணிடலாம்'' நர்ஸ் நகைத்தாள்.

இதற்கு மேலும் அங்கே இருந்தால், உயிரையும் உயிலையும் எழுதி வைக்க வேண்டியதிருக்கும் என்று தோன்றியது முருகேசனுக்கு. டக்கென்று ஒரு ஐடியாவும் உதித்தது.

''ஓ.கே. டாக்டர். நான் இப்பவே அட்மிட் ஆயிடறேன். இதுக்கு முன்னே மூணு பெரிய ஹாஸ்பிடல்ல ட்ரீட்மென்ட் எடுத்துட்டு எஸ்கேப் ஆகி வந்திருக்கேன். எட்டு லட்ச ரூபாய்தான் கடன் பாக்கி வைச்சிருக்கேன். ஆனா பாருங்க, ஃபீஸுக்குப் பதிலா என் கிட்னியைக்கூட உங்களால உருவ முடியாது. போன வாரம்தான் அதை ரெண்டு லட்சத்துக்கு வித்தேன். எனக்கு எந்த வார்டு ஒதுக்கியிருக்கீங்க சொல்லுங்க?''

இப்போது, டாக்டருக்கும் நர்ஸுக்கும் வியர்த்தது. முருகேசன் வலுக்கட்டாயமாக வெளியில் கொண்டு விடப்பட்டான். இரண்டு முறை தும்மினான். வீட்டில் மனைவி போட்டுத் தரும் சுக்குக் கஷாயம் நினைவுக்கு வந்தது.

# 20.4.2008 முதல் 26.4.2008 வரை

**மேஷம்:** மேஷ ராசிக்காரர்களே! இனி உங்களுக்குப் பணத்தில் குறை இருக்காது. குடும்பத்துல சந்தோஷம் அதிகமாகும். உடல் ஆரோக்கியம் ஜோராக இருக்கும். தொழில்ல நல்ல முன்னேற்றம் உண்டுங்க. ராகு/கேது/சனி வழிபாடு நன்மையை அதிகரிக்குமுங்க. (சந்தோஷப்படும்போது தஞ்சை பரத்வாஜை நினைச்சுக்கங்க!)

**ரிஷபம்:** ரிஷப ராசிக்காரர்களே! இந்த வாரம் 'டூர்' போவீங்க. பெரிய மகான்களின் தரிசனம் கிடைக்கப் போகுது. வேலையில் சுமை இருக்காது. வியாபாரம் நல்ல சக்கைப் போடு போடும். புதிய வேலை கிடைக்கும். சனி/ குரு வழிபாடு நன்மையை அதிகரிக்கும். (மகான்களின் தரிசனம் கிடைக்கறப்போ... நமக்கும் சேர்த்து ஆசி வாங்கிட்டு வாங்க.)

**மிதுனம்:** மிதுன ராசிக்காரர்களே! கல்யாணம், காது குத்தல்ன்னு ஜமாய்க்கப் போறீங்க. யார்கிட்டேயும் வாக்குவாதம் மட்டும் வெச்சுக்காதீங்க. கைப்பொருள் மீது கவனம் வைங்க. உடம்பையும் கொஞ்சம் பார்த்துக்குங்க. ராகு/கேது வழிபாடு நன்மையளிக்குமுங்க. (வீட்டுல விசேஷம்னா நமக்கும் ஒரு அழைப்பு உண்டுதானே?)

**கடகம்:** கடக ராசிக்காரர்களே! கவலைப்படாதீங்க. உங்க மனக்குறைகள் தீரும். படிப்புல நல்ல பெயர் வாங்குவீங்க. உங்க எதிரிங்க ஓடிடுவாங்க. கல்யாணம் நிச்சயமாகும். வியாபாரம் நல்லா இருக்கும். வழக்குல ஜெயிப்பீங்க. ராகு/கேது/குரு/சனி வழிபாடு நன்மையை அதிகப்படுத்தும். (வழக்கு ஜெயிச்சா நமக்கு ஸ்வீட் தருவீங்களா, அல்வா கொடுப்பீங்களா?)

**சிம்மம்:** சிம்ம ராசிக்காரர்களே! வெளிநாடு போகும் வாய்ப்பு வரப் போகுது. நகை நட்டுன்னு வாங்கிக் குவிக்கப் போறீங்க. குடும்பத்துல சந்தோஷம் பெருகப் போகுது. வீடு, மனை வாங்க நல்ல காலம். உடம்பு நல்ல நிலையில இருக்கும். தொழில் சூடு பிடிக்கும். (இன்னும் அதிகமாக சவரன் விலை ஏர்றதுக்குள்ள நிறைய வாங்கி பீரோவுல அடுக்கிடுங்க)

**கன்னி:** கன்னி ராசிக்காரர்களே! புதிய தொழில் தொடங்கப் போறீங்க. வீண் செலவைக் குறைத்துக் கொள்வீங்க. பூர்வீக சொத்து உங்களைத் தேடி வரப் போகுது. அதோடு புதிய சொத்தும் சேரும். ஆரோக்கியத்துல குறை இருக்காது. ராகு/கேது வழிபாடு நன்மை தரும். (புதுத் தொழில்ல நாலு பேருக்கு நல்ல சம்பளத்துல வேலை தருவீங்கதானே?)

**துலாம்:** துலாம் ராசிக்காரர்களே...! வீட்டை மாற்றப் போறீங்க. பொருள் சேர்க்கை கூடப் போகுது. வேலைதான் கொஞ்சம் அதிகரிக்கும். செலவைக் குறைத்துக் கொள்வீங்க. வீடு, மனை வாங்குவீங்க. கடன்காரன் வீடு தேடி வர மாட்டான். ராகு/கேது/குரு வழிபாடு நன்மையைப் பெருக்கும். (வேலைப் பளு அதிகமாயிருந்தாலும் வழிபாடை மறந்துடாதீங்க!)

**விருச்சிகம்:** விருச்சிக ராசிக்காரர்களே. பண

தஞ்சை பரத்வாஜ்

# நடக்குமென்பார்

சென்னை விளம்பரப் பலகைகளையெல்லாம் அதிரடியா நீக்கியதில் யாருக்கு நஷ்டம் அதிகம்னு சொல்ல முடியுமா பரத்வாஜ் ஸார்..?





வரவு அதிகமாகப் போகுதுங்க. நீங்க ஒரு வார்த்தை சொன்னா போதும். அப்படியொரு பவர் பெருகப் போகுது. உத்தியோகத்துல வேலைச் சுமை குறையும். தெய்வ அனுகூலம் கிட்டப் போகுது. வியாபாரம் நல்லா இருக்கும். சனி வழிபாடு செய்து வர நன்மை பெருகுமுங்க. (நமக்கும் கொஞ்சம் சொல்லுங்க... அந்த பவர் டெக்னிக்க...)



**தனுசு:** தனுசு ராசிக்காரர்களே... கவனத்தில் கண்ணாய் இருங்க. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவைங்க. பெரிய 'பதவிங்க' உங்களைத் தேடி வரும். பணக் கஷ்டம் இருக்காது. சுப நிகழ்ச்சிங்க நடக்கும். ராகு/கேது வழிபாடு நன்மையைத் தரும். (பெரிய பதவின்னா அரசியல்லதான்னு அர்த்தமில்லே... ஞாபகமிருக்கட்டும்!)



**மகரம்:** மகர ராசிக்காரர்களே... உடல் நல்ல ஆரோக்கியம் பெறப் போகுது. கடன் தொல்லை எல்லாம் இருக்காதுங்க. மந்தமாக இருந்த வியாபாரம் சூடு பிடிக்கப் போகுது. வேலைப்பளு இருக்காது. வேலையில மாற்றம் வரப் போகுது. குழந்தைகள் மகிழ்ச்சி பெருகும். சனி வழிபாடு நன்மையைத் தரும். (நீங்க உற்சாகமா பாடுறது கல்கி ஆபீஸ் கேட் வரை கேட்குது!)



**கும்பம்:** கும்ப ராசிக்காரர்களே! இனிமே பணப் பற்றாக்குறை இருக்காதுங்க. பாக்கிகள் உடனே வசூலாகப் போகுது. வாகனம் வாங்கப் போறீங்க. தொழிலில் நல்ல ஏற்றம் இருக்கும். மகப்பேறு பாக்கியம் உண்டு. சனி வழிபாடு நற்பலனை அதிகரிக்கும். (புதுக் கார் வாங்கப் போறீங்க. வழியில பார்த்தா நமக்கும் கொஞ்சம் 'லிப்ட்' கொடுங்க!)



**மீனம்:** மீன ராசிக்காரர்களே! உத்தியோகத்துல நல்ல பேர் வாங்குவீங்க. வெளிநாடு போவீங்க. பூர்வீகச் சொத்து தேடி வரும். தடையான திருமணம் நடக்கப் போகுது. நண்பர் மூலம் ஆதாயம், அதிக நன்மை கிடைக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நன்மை பெருகும். (உங்க நண்பரை நமக்கும் அறிமுகப் படுத்தி வையுங்களேன்!)

# நடக்கும்!

# 34. "ஆகா! இதென்ன?"

விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மீது தாவி ஏறிக்கொண்டார்கள்.

"பொன்னா! முண்டாசு கட்டி மீசை வைத்துக்கொண்டிருந்த வண்டிக்காரன் யார்? நீதானே!" என்று குதிரைகள் போய்க் கொண்டிருக்கும்போதே விக்கிரமன் கேட்டான்.

"ஆமாம், மகாராஜா!"

"சிறைக்குள்ளிருந்தபோது நீ என்னை மறந்துவிட்டாயாக்கும் என்று நினைத்தேன்."

"நான் ஒரு வேளை மறந்தாலும், என்னை மறக்க விடாதவர் ஒருவர் இருக்கிறாரே!"

"ஆமாம், மகாராஜா! அதனால்தான் ஒரு கணம்கூடத் தாமதிப்பதற்கில்லை என்று நான் சொன்னேன்."

"நாளை மத்தியானம் வரையில் அங்கே கப்பல் காத்துக்கொண்டிருக்கும்."

"அதற்குள் நாம் போய்விடலாம், மகாராஜா!"

விக்கிரமன் சற்றுப் பொறுத்து மறுபடியும், "தேவி எங்கே இருக்கிறார் பொன்னா?" அவரிடம் கடைசியாக ஒரு தடவை விடை பெற்றுக்கொண்டு கிளம்பியிருந்தால், எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும்!" என்றான்.

"அது முடியாது, மகாராஜா!"

"எது முடியாது?"

"தேவியிடம் விடை பெற்றுக்கொண்டு கிளம்புவது."

## பார்த்திபன் கனவு

"யார் அது?"

"வேறு யார்? தங்களை யமன் வாயிலிருந்து மீட்ட தேவிதான்."

இதைக் கேட்டதும் விக்கிரமனுடைய உள்ளம் மகிழ்ச்சியினால் துள்ளிற்று. குந்தவியைப் பற்றி மேலும் விசாரிக்க வேண்டுமென்கிற ஆவல் உண்டாயிற்று. ஆனால், சிறிது தயக்கமாகவுமிருந்தது.

சற்றுப் பொறுத்து, "எங்கே போகிறோம் இப்போது?" என்றான் விக்கிரமன்.

"மாமல்லபுரத்துக்கு, மகாராஜா!"

"பொன்னா!"

"என்ன, மகாராஜா?"

"நாளைக் காலைக்குள் மாமல்லபுரம் போய்விட வேண்டும்."

"ஆமாம்; முடியாதுதான்! இனி உறையூருக்கு மறுபடியும் எப்படிப் போக முடியும்?"

"தேவி உறையூரில் இல்லை, மகாராஜா!"

"தேவி உறையூரில் இல்லையா? பின் எங்கே?"

"மாமல்லபுரத்தில்!"

"ஆ!" என்றான் விக்கிரமன். சில நாட்களாகச் சிறைப்பட்டிருந்த பிறகு விடுதலையடைந்த உற்சாகம், குளிர்ந்த இரவு நேரத்தில் குதிரை மீது செல்லும் கிளர்ச்சி, இவற்றுடன், 'குந்தவி மாமல்லபுரத்தில் இருக்கிறாள்' என்னும் செய்தியும் சேர்ந்து

அவனுக்கு எங்கேயோ ஆகாயத்தில் பறப்பது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று.

''அப்படியானால் அவரிடம் விடை பெற முடியாது என்று சொன்னாயே, ஏன்? பொன்னா! ஒருகண நேரமாவது அவரை நான் அவசியம் பார்க்க வேண்டும். பார்த்து நன்றி செலுத்த வேண்டும். அதோடு என் தாயாரைக் கண்டுபிடித்துப் பாதுகாக்கும் பொறுப்பையும் அவரிடம் ஒப்புவிக்க வேண்டும்.''

''அதுதான் முடியாது!'' என்றான் பொன்னன்.

''ஏன் அவ்வளவு உறுதியாகச் சொல்லு கிறாய்?''

''தேவியின் உறுதி எனக்கும் தெரிந் திருப்பதினாலேதான். தங்களுக்கு விடை கொடுத்து அனுப்பும் உத்தேசம் அவருக்குக் கிடையாது. தங்களோடு அவரும் புறப் படச் சித்தமாயிருக்கிறார்.''

# அமரர் கல்கி

''ஆகா! நிஜமாகவா? இவ்வளவு முக் கியமான செய்தியை முன்னமே எனக்கு ஏன் சொல்லவில்லை?''

''இப்போதுகூட நான் சொல்லியிருக்கக் கூடாது. தாங்கள் கப்பல் ஏறிய பிறகு தங்களை அதிசயப்படுத்த வேண்டும் என்று தேவி உத்தேசித்திருந்தார். அவசரப் பட்டுச் சொல்லிவிட்டேன்.''

விக்கிரமன் சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். திடீரென்று, ''அதோ பாருங்கள் மகாராஜா!'' என்று பொன்னன் கூறியதும் விக்கிரமன் சிறிது திடுக்கிட்டுப் பார்த்தான். சாலையில் ஒரு பக்கத்து மரத் தடியில் பத்துப் பன்னிரண்டு பேர் கும்ப லாக நின்றார்கள். அவர்களில் ஒருவன் தீவர்த்தி வைத்துக் கொண்டிருந்தான். தீவர்த்தி வெளிச்சத்தில் அவர்களுடைய உருவங்கள் கோரமாகக் காட்சி அளித்தன. அவர்களுடைய கழுத்தில் கபால மாலை கள் தொங்கின. அவர்களுடைய கைகளில் கத்திகள் மின்னின. நெற்றியில் செஞ் சந்தனமும் குங் குமமும் அப் பிக் கொண் டிருந்தார்கள்.



அவர்கள் நின்ற இடத்தைக் குதிரைகள் தாண்டியபோது ஒரு கணம் விக்கிரமனுக்கு உடம்பு நடுங்கிற்று. அவர்களைக் கடந்து சிறிது தூரம் சென்றதும், ''அப்பா! என்ன கோரம்?'' என்றான் விக்கிரமன்.

''மகாராஜா! தங்களுக்காகத்தான் இங்கே இவர்கள் காத்திருக்கிறார்கள். இவர்களிடம் தங்களை ஒப்புவித்து விடும்படிதான் மாரப்பபூபதி கடைசியாகத் தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டார். நான் இவர்களை முந்திக்கொண்டேன். தாங்கள் குதிரை





''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''இன்னொரு தடவை தங்களைக் கப்பலில் அனுப்பிவிட்டு நான் இங்கே இருப்பேன் என்று நினைக்கிறீர்களா? இங்கே எனக்கு என்ன வேலை? வள்ளி ஏற்கெனவே குந்தவி தேவியுடன் மாமல்லபுரத்தில் இருக்கிறாள். நானும் அவளும் தங்களுடன் வரப் போகிறோம்.''

**வி**க்கிரமன் சற்று மௌனமாயிருந்துவிட்டு, ''பொன்னா! நீ சொல்வது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியளிக்கிறது. நீயும் வள்ளியும் என்னுடன் வந்தால், சோழ நாடே வருகிற மாதிரிதான். ஆனால், ஒரு விஷயம்தான் என் மனத்தை வருத்திக்கொண்டிருக்கிறது. மகாராணியின் கதி என்ன? அவரை யார் தேடிக் கண்டுபிடிப்பார்கள்? அவருக்கு யார் என்னைப் பற்றிச் சொல்வார்கள்? நான் தாய்நாட்டுக்கு வந்ததின் முக்கிய நோக்கம் மகாராணியைப் பார்ப்பதற்கு. அவரைப் பார்க்காமலே திரும்பிப் போகிறேன். அவருக்கு என்னைப் பற்றிச் செய்தி சொல்லவாவது யாரேனும் இருக்க வேண்டாமா?'' என்றான்.

பொன்னனுடைய மனத்திலும் அந்த விஷயம் உறுத்திக்கொண்டிருந்தது. சிவனடியாரிடம் தான் சொன்னபடி ஒன்றுமே செய்யவில்லை. அவர் என்ன ஆனாரோ, என்னவோ? மகாராணியை ஒருவேளை கண்டுபிடித்திருப்பாரோ?

பொன்னனுடைய மனத்தில் சமாதானம் இல்லாவிட்டாலும், வெளிப்படையாக, ''மகாராணியைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம் மகாராஜா! அவரை சிவனடியார் பாதுகாப்பார். சிவனடியாரால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. மகாசக்தி வாய்ந்தவர்'' என்றான்.

''ஆமாம்; அவர் நம்மை மாமல்லபுரத்துக்கருகிலுள்ள சிற்ப வீட்டில் சந்திப்ப

மேல் இவ்விதம் தனியாகப் போவீர்கள் என்று இவர்கள் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். இன்னும் ரொம்ப நேரம் காத்திருப்பார்கள். பிறகு கபால பைரவரிடம் போய், தாங்கள் வரவில்லையென்று தெரிவிப்பார்கள். இன்று கபால பைரவருக்கு மாரப்ப பூபதி மேல் பிரமாதமான கோபம் வரப் போகிறது!'' என்றான் பொன்னன்.

''பொன்னா! சக்கரவர்த்தியின் சிரஸாக்கினை, கபாலிகர்கள் பலி - இந்த இரண்டு வித ஆபத்துகளிலிருந்துமல்லவா என்னை நீ தப்புவித்திருக்கிறாய்? முன்னே காட்டாற்றில் போனவனை எடுத்து உயிர் கொடுத்துக் காப்பாற்றினாய். சோழ வம்சத்தின் குலதெய்வம் உண்மையில் நீதான். உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? நாளைய தினம் உன்னை விட்டுப் பிரிவேன். மறுபடியும் எப்போது காண்பேனோ, என்னவோ?''

''லட்சணந்தான்!'' என்றான் பொன்னன்.

''என்ன சொல்கிறாய்?''

''என்னைவிட்டாவது தாங்கள் பிரிவதாவது?''

தாகச் சொன்னாரல்லவா?''

''அது இப்போது முடியாத காரியம். சிவனடியாரைப் பார்க்கத் தங்கினோமானால், கப்பலைப் பிடிக்க முடியாது.''

''உண்மைதான். ஆனாலும் அன்னையையும் சிவனடியாரையும் பார்க்காமல் போவதுதான் மனத்துக்கு வேதனை அளிக்கிறது'' என்றான் விக்கிரமன்.

அப்போது ''ஆகா! இதென்ன?'' என்று வியப்புடன் கூவினான் பொன்னன்.

இதற்குள் அவர்கள் காட்டாற்றைச் சமீபித்து அதன் இக்கரையிலுள்ள மகேந்திர மண்டபத்துக்கருகில் வந்துவிட்டார்கள். அந்த மண்டபத்தின் வாசலில் தோன்றிய காட்சிதான் பொன்னனை அவ்விதம் வியந்து கூவச் செய்தது. அங்கே ஏழெட்டு ஆட்கள் ஆயுதபாணிகளாக நின்றார்கள். இரண்டு பேர் கையில் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தார்கள். மண்டபத்தின் வாசல் ஓரமாக ஒரு பல்லக்கு வைக்கப்பட்டிருந்தது.

''இன்று ராத்திரி என்னவெல்லாமோ ஆச்சரிய சம்பவங்கள் நடைபெறுகின்றன!'' என்று பொன்னன் முணுமுணுத்தான்.

''இந்த வேளையில் இங்கே யார், பொன்னா?'' என்றான் விக்கிரமன்.

''தெரியவில்லை, மகாராஜா!''

''இவர்கள் கபாலிகர்கள் இல்லை, நிச்சயம். வேறு யாராயிருக்கலாம்?''

''ஒரு வேளை குந்தவி தேவிதான் நமக்கு உதவிக்காக இன்னும் சில ஆட்களை அனுப்பியிருக்கிறாரோ, என்னவோ? ஆனால் பல்லக்கு என்னத்துக்கு?''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே மகேந்திர மண்டபத்தின் வாசல் வந்துவிட்டது. குதிரைகளை இருவரும் நிறுத்தினார்கள். அங்கு நின்ற ஆட்களில் ஒருவனை எங்கேயோ பார்த்ததாக பொன்னனுக்கு நினைவு வந்தது. எங்கே பார்த்திருக்கிறோம்? ஆகா! திருச்செங்காட்டாங்குடியில்! பரஞ்சோதி அடிகளின் ஆள் குமரப்பன் இவன்.

அந்த மனிதனும் பொன்னன் முகத்தைப் பார்த்து அடையாளம் தெரிந்து கொண்டான்.

**''ராத்திரி என்னவெல்லாமோ ஆச்சரிய சம்பவங்கள் நடைபெறுகின்றன!'' என்று பொன்னன் முணுமுணுத்தான்**

''ஓ! பொன்னனா?'' என்று அவன் ஆச்சரியத்துடன் கூறி, ''பொன்னா! சமாசாரம் தெரியுமா? உறையூர் மகாராணி அகப்பட்டு விட்டார்! இதோ இந்த மண்டபத்துக்குள்ளே இருக்கிறார். உன்னைப் பற்றிக்கூட விசாரித்தார்'' என்றான்.

## 35. தாயும் மகனும்

''மகாராணி அகப்பட்டுவிட்டார்'' என்ற வார்த்தைகளைக் கேட்டதும் விக்கிரமனுக்கும் பொன்னனுக்கும் உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிற்று. இருவரும் குதிரை மேலிருந்து கீழே குதித்தார்கள்.

அப்போது உள்ளேயிருந்து, ''குமரப்பா! யார் அங்கே? பொன்னன் குரல் மாதிரி இருக்கிறதே'' என்று ஒரு பேச்சுக் குரல் கேட்டது. அது மகாராணி அருள்மொழி தேவியின் குரல்.

''அம்மா!'' என்று அலறிக்கொண்டு விக்கிரமன் மகேந்திர மண்டபத்துக்குள் நுழைந்தான். பொன்னனும் பின்னோடு சென்றான்.

அப்போது அந்த இருளடைந்த

மண்டபத்துக்குள்ளேயிருந்து ஒரு பெண் உருவம் வெளியே வந்தது. அது அருள் மொழி ராணியின் உருவம்தான். ஆனால், எவ்வளவு மாறுதல்? விக்கிரமன் கடைசியாக அவரைப் பார்த்தபோது, இன்னும் யௌவனத்தின் சோபை அவரை விட்டுப் போகவில்லை. இப்போதோ, முதுமைப் பருவம் அவரை வந்தடைந்துவிட்டது. மூன்று வருஷத்துக்குள் முப்பது வயது அதிகமானவராகக் காணப்பட்டார்.

விக்கிரமன் ஒரே தாவலில் அவரை அடைந்து சாஷ்டாங்கமாய்க் கீழே விழுந்து அவருடைய பாதங்களைப் பற்றிக் கொண்டான். அருள்மொழிராணி கீழே உட்கார்ந்து விக்கிரமனுடைய தலையைத் தூக்கித் தன் மடி மீது வைத்துக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

விக்கிரமனைப் பின்தொடர்ந்து மண்டபத்துக்குள் நுழைந்த பொன்னன், மேற்படி காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். தற்செயலாக அவனுடைய பார்வை மண்டபத்தின் ஒரு பக்கத்தில் கட்டுண்டு கிடந்த உருவத்தின் மேல் விழுந்தது; மங்கலான தீவர்த்தியின் வெளிச்சத்தில் அது குள்ளனுடைய உருவம் என்பதை பொன்னன் கண்டான்.

பொன்னனுடைய பார்வை குள்ளன் மீது விழுந்ததும் குள்ளன், ''ஹீஹீஹீ'' என்று சிரித்தான்.

அந்தச் சிரிப்பைக் கேட்டு விக்கிரமனும் அவனைப் பார்த்தான். திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து, ''பொன்னா!'' என்றான்.

''ஆம். மகாராஜா! மாமல்லபுரத்திலிருந்து தங்களுக்கு வழிகாட்டி வந்த சித்திரக்குள்ளன்தான் இவன்!'' என்றான்.

குள்ளன் மறுபடியும் ''ஹீஹீஹீ'' என்று சிரித்தான்.

அருள்மொழி ராணி எல்லோரையும் மாறி மாறிப் பார்த்தாள். யாரை என்ன கேட்பது என்று தெரியாமல் திகைப்பவளாகக் காணப்பட்டாள். கடைசியில் பொன்னனைப் பார்த்து, ''பொன்னா, எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டது போலிருக்கிறது. அந்த மலைக் குகையில் எத்தனை நாள் இருந்தேன் என்பதே தெரியாது. கடைசியில் அருவியில் விழுந்து உயிரை விடலாம் என்று எத்தனித்தபோது சிவனடியார் வந்து தடுத்துக் காப்பாற்றினார். 'உன் மகன் திரும்பி வந்திருக்கிறான், அவனை எப்படியும் பார்க்கலாம்' என்று தைரியம் கூறினார். பொன்னா, காட்டாற்று வெள்ளத்திலிருந்து விக்கிரமனை நீ காப்பாற்றினாயாமே?'' என்று கேட்டாள்.

அப்போது விக்கிரமன், ''வெள்ளத்திலிருந்து காப்பாற்றியதுதானா? சக்கரவர்த்தியின் சிரசாக்ஞையிலிருந்து - காளிக்குப் பலியாவதிலிருந்து - இன்னும் எவ்வளவோ விதத்தில் பொன்னன் என்னைக் காப்பாற்றினான்'' என்றான்.

''காளிக்குப் பலியா?'' என்று சொல்லிக் கொண்டு அருள்மொழி நடுநடுங்கினாள்.

குள்ளன் மறுபடியும் ''ஹீஹீஹீ'' என்று பயங்கரமாய்ச் சிரித்தான்.

''பலி! பலி! இன்று ராத்திரி ஒரு பெரிய பலி விழப் போகிறது! காளியின் தாகம் அடங்கப் போகிறது!'' என்றான்.

எல்லோரும் அவனையே கண்கொட்டா

**விக்கிரமன் அப்போது துள்ளி எழுந்து, "பொன்னா! இவன் என்ன உளறுகிறான்! சிவனடியாரைப் பற்றி..." என்றான்**

மல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

''இன்று அர்த்தராத்திரியில் சிவனடியார் பலியாகப் போகிறார்! மகாபத்திர காளியின் இராஜ்யம் ஆரம்பமாகப் போகிறது! அப்புறம்-ஹாஹாஹா...! அப்புறம்... மண்டை ஓட்டுக்குப் பஞ்சமே இராது!'' என்றான் குள்ளன்.

விக்கிரமன் அப்போது துள்ளி எழுந்து, ''பொன்னா! இவன் என்ன உளறுகிறான்! சிவனடியாரைப் பற்றி...'' என்றான்.

''ஹிஹிஹி! உளறவில்லை. உண்மையைத் தான் சொல்கிறேன். அந்தக் கபடச் சாமியாரை இத்தனை நேரம் காலையும்கையையும் கட்டிப் பலிபீடத்தில் போட்டிருப்பார்கள். நடுநிசி ஆச்சோ, இல்லையோ, கத்தி கழுத்திலே விழும்'' என்றான்.

அப்போது அருள்மொழித்தேவி விக்கிரமனைப் பார்த்து, ''குழந்தாய்! இவன் முன்னமேயிருந்து இப்படித்தான் சொல்லி என்னை வேதனைப்படுத்திக் கொண்டிருக்கிறான். ஐந்தாறு நாளைக்கு முன்னால் நான் குகையிலிருந்து தப்பி அருவியில் விழப் போனபோது சிவனடியார் தோன்றி, சீக்கிரத்தில் என்னை மீட்டுக் கொண்டு போக ஆட்கள் வருவார்கள் என்று தெரிவித்தார். அந்தப்படியே இவர்கள் வந்து என்னை மீட்டுக் கொண்டு வந்தார்கள். வழியில் மறைந்து நின்ற இந்தக் குள்ளனையும், பிடித்துக் கொண்டு வந்தார்கள். இங்கு வந்து சேர்ந்தது முதல் இவன் இன்று ராத்திரி சிவனடியாரைக் கபாலிகர்கள் பலிகொடுக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். ஐயோ! எப்பேர்ப்பட்ட மகான்! நமக்கு எத்தனை ஒத்தாசை செய்திருக்கிறார்! அவருக்கா இந்தப் பயங்கரமான கதி!'' என்று அலறினாள்.

விக்கிரமன் பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! நீ என்ன சொல்கிறாய்? இந்தக் கொடும் பாதகத்தைத் தடுக்காவிட்டால் நாம் இருந்து என்ன பிரயோஜனம்?'' என்றான்.

''அதெப்படி முடியும், மகாராஜா! உங்கள் நிலைமையை மறந்து பேசுகிறீர்களே! நாளைப் பொழுது விடிவதற்குள் நாம் மாமல்லபுரம் போய்ச் சேராமற் போனால்...''

''சேராமற்போனால் என்ன? கப்பல் போய்விடும். அவ்வளவு தானே?''

அப்போது பொன்னன் அருள்மொழி ராணியைப் பார்த்து, ''அம்மா, இவரைப் பெரும் அபாயம் சூழ்ந்திருக்கிறது. தேசப் பிரஷ்டமானவர் திரும்பி வருவதற்குத் தண்டனை





என்னவென்று தங்களுக்குத் தெரியாதா? இவர் இங்கே வந்திருப்பது மாரப்ப பூபதிக்குத் தெரிந்து, காஞ்சி சக்கரவர்த்திக்கும் தெரியப்படுத்திவிட்டார். நாளைக் காலைக்குள் இவர் மாமல்லபுரம் போய்க் கப்பலில் ஏறியாக வேண்டும். இல்லாவிட்டால் தப்புவது அரிது. இப்போது சிவனடியாரைக் காப்பாற்றுவதற்காகப் போனால், பிறகு இவருடைய உயிருக்கே ஆபத்துதான். நீங்களே சொல்லுங்கள். இவர் என்ன செய்ய வேணுமென்று?'' என்றான்.

அருள்மொழி ராணி பெருந்திகைப்புக்குள்ளானாள்.



விக்கிரமன் அன்னையைப் பார்த்து, ''அம்மா! பார்த்திப மகாராஜாவின் வீரபத்தினி நீ! இந்த நிலைமையில் நான் என்ன செய்ய வேண்டும், சொல்! நமக்குப் பரோபகாரம் செய்திருக்கும் மகானுக்கு ஆபத்து வந்திருக்கும்போது, என்னுடைய உயிருக்குப் பயந்து ஓடுவதா? என் தந்தை உயிரோடிருந்தால் இப்படி நான் செய்வதை விரும்புவாரா?'' என்றான்.

''சுவரை வைத்துக்கொண்டுதான் சித்திரம் எழுத வேண்டும். இவர் பிழைத்திராவிட்டால் பார்த்திப மகாராஜாவின் கனவுகளை நிறைவேற்றுவது எப்படி?'' என்றான் பொன்னன்.

அருள்மொழி ராணி இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தாள். கடைசியில், பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! என்னைக் கல்நெஞ்சமுடையவள், பிள்ளையிடம் பாசமில்லாதவள் என்று ஒரு வேளை நினைப்பாய். ஆனாலும், என் மனத்திலுள்ளதைச் சொல்கிறேன். நமக்கு எவ்வளவோ உபகாரம் செய்திருக்கும் ஒருவருக்கு ஆபத்து வந்திருக்கும்போது என் பிள்ளை உயிருக்குப் பயந்து ஓடினான் என்ற பேச்சைக் கேட்க நான் விரும்பவில்லை!'' என்றாள்.

உடனே விக்கிரமன், தாயாரின் பாதங்களில் நமஸ்கரித்து, எழுந்து, ''அம்மா! நீதான் வீரத்தாய்! பார்த்திப மகாராஜாவுக்குரிய வீர பத்தினி!'' எனக் குதூகலத்துடன் உரைத்தான்.

பிறகு பொன்னனைப் பார்த்து, ''கிளம்பு, பொன்னா! இன்னும் என்ன யோசனை?'' என்றான்.

''எங்கே கிளம்பிப் போவது? பலி எங்கே நடக்கிறதென்று யாருக்குத் தெரியும்?'' என்றான் பொன்னன்.

''ஹிஹிஹி! நான் வழி காட்டுகிறேன். என்னைக் கட்டவிழ்த்துவிடுங்கள்'' என்று சித்திரக் குள்ளன் குரல் கேட்டது.

குள்ளனுடைய கட்டுகள் அவிழ்க்கப்பட்டன. அவன் கையில் ஒரு தீவர்த்தியைக் கொடுத்தார்கள். விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மேல் ஏறிக்கொண்டார்கள். குள்ளன் கையில் தீவர்த்தியுடன் மேற்கு நோக்கிக் காட்டு வழியில் விரைந்து செல்ல, விக்கிரமனும் பொன்னனும் அவனைத் தொடர்ந்து பின்னால் சென்றார்கள்.

(தொடரும்)

## மின்னல் கதைகள்




# போகாவிட்டால்...

ஐந்து நட்சத்திர ஹோட்டல்.

இரவின் ரம்மியமான சூழ்நிலையில் திருமண வரவேற்பு நிகழ்ச்சி.

வரவேற்பு ஏழு மணி என்று இன்விடேஷனில் போடப்பட்டிருந்தாலும், இன்னும் மணமக்கள் வரவில்லை.

நிகழ்ச்சிக்கு வந்திருந்த டாக்டர் ஊர்மிளா, டென்ஷனில் இருந்தாள்.

கூட வந்திருந்த இன்னொரு டாக்டரிடம், "ஃபங்ஷனுக்கு வந்து பிரஸன்டேஷனைக் கொடுத்துட்டு சீக்கிரமா கிளம்பிடலாம்னு வந்தா, இன்னும் பொண்ணு மாப்பிள்ளை வரலயே?"

"ஏன், அவசரமா எதுவும் வேலை இருக்கா?"

"சிஸேரியன் கேஸ் ஒண்ணு இருக்கு. போய்ப் பண்ணணும்."

"அதனாலென்ன? கொஞ்சம் லேட்டா ஆரம்பிங்க."

"இல்லே டாக்டர். நான் சீக்கிரமா போய்ப் பண்ணியாகணும்."

"ஏன்? சிக்கலான பிரசவமா?"

"இல்லே. நான் லேட்டா போனா, அங்கே நார்மல் டெலிவரியாயிடும். அதான்."

**எஸ்.ராஜேஸ்வரன்**

# கேட்கவில்லை

பெரியவருக்கு மகிழ்ச்சியோ மகிழ்ச்சி. ஒரு வழியாய் சங்கரன் ஹியரிங் எய்டு வாங்கிக் கொடுத்துவிட்டான். காது கேளாது பத்து ஆண்டுகள் வாழ்ந்த அவர், இனி நியூஸ் கேட்கலாம், பாட்டுகள் கேட்கலாம், பேத்தியின் மழலை கேட்கலாம்!

"துல்லியமாக் கேக்குதான்னு பாருங்கப்பா. சரியா கேக்கலைன்னா திருப்பிக் குடுத்திடலாம். ஃபிரண்டு கடைதான். வாபஸ் வாங்கிக்குவான்" என்று இரைந்து சொல்லிவிட்டு, சங்கரன் வெளியே சென்றான்.

பெரியவர் ஆசையாய் ஹியரிங் எய்டை அணிந்து கொண்டபோது தொலைபேசி கிணுகிணுத்தது. "என்ன அருமையான சத்தம்! கேட்டு எத்தனை வருஷமாச்சு!"

மருமகள் கிச்சனிலிருந்து வந்து ஃபோனை எடுத்தாள். தணிந்த குரலில்தான் பேசினாள். ஆனால் பெரியவருக்குத் துல்லியமாகக் கேட்டது. "நான்தான்ம்மா பேசுறேன். இங்க ஒரே கூத்தா இருக்குதுமா. லோன் போட்டு அப்பனுக்குச் செவிட்டு மிஷின் வாங்கிக்குடுத்திருக்கார். இன்னைக்கோ நாளைக்கோன்னு இருக்கற கெழத்துக்குக் காது கேட்டா என்ன? கேக்காட்டி என்ன? அந்தக் காசுக்கு நம்ம பவித்ராவுக்கு ஒரு நகை வாங்கியிருக்கலாம். எல்லாம் என் தலையெழுத்தும்மா!"

'சரியா கேக்கலை; திருப்பிக் குடுத்துடுப்பான்னு சங்கரன்ட்ட சொல்லிரணும்' என்று நினைத்தபடி, ஹியரிங் எய்டைக் கழற்றினார் பெரியவர்.



# ரயிலின் வேகத்தில்

அதிரடி ஆக்ஷன் ஹீரோவான சூப்பர் ஸ்டார் ரஜினியை வைத்து தென்றல் போல ஒரு காதல் க(வி)தையை எடுத்த அனுபவமும் எனக்கு உண்டு. கவிதாலயா தயாரித்த அந்தப் படம் 'புதுக்கவிதை'.

ஒரு எஸ்டேட் உரிமையாளர் சுகுமாரி. அவருக்குக் காதல் என்றால் அத்தனை வெறுப்பு. அவரது மகள் ஜோதியை, ஏழையான ரஜினி, காதலிக்கிறார். திரைக் கதையில் இருந்த விறுவிறுப்பு, அந்த சாதாரணமான கதையைக்கூட ஒரு வெற்றிப்படமாக்கியது.

புதுக்கவிதையில் இடம் பெற்ற இசை ஞானி இளையராஜாவின் பாடல்கள் அனைத்துமே மிகப் பெரிய அளவில் ஹிட் ஆனவை. அவற்றுள் ஒரு பாடலை நாங்கள் படம் பிடித்த லொகேஷன், கேரளாவில் உள்ள மூணாறு. பச்சைப் பசேலென்று தேயிலைத் தோட்டங்கள், மலைகளை ஒட்டிய மேகக் கூட்டங்கள், அந்த இயற்கை சூழ்ந்த இடம், பாடலுக்கு நல்ல அழகைக் கொடுத்தது. அங்கே ஒரு பெரிய ஏரி. அந்த ஏரியில் தண்ணீரை ஒட்டியபடி மேகங்கள் நகரும். அது காண்பதற்கு மிகவும் அரியதொரு காட்சி. பனி படர்ந்த அதிகாலைப் பொழுதில் தொடங்கி, நேரம் ஆகஆக, லேசாக பனி விலகும்போது பாடல் காட்சியைப் படம் பிடிக்க விரும்பினோம். அதிகாலை நாலு மணிக்கு, யூனிட்டுடன் அங்கே போய்ச் சேர்ந்தோம். கடுமையான குளிர் வீசியது. அதைப் பொருட்படுத்தாமல், நாங்கள் எங்கள் படப்பிடிப்பைத் தொடங்கினோம். முழுமையான பனி சூழ்ந்த காட்சியில் தொடங்கி, காலை சூரியன் உதயமாகும் காட்சி வரை ஒவ்வொரு கட்டத்தையும் மிக அற்புதமாகப் படம் பிடித்துக் கொண்டிருந்தோம். திடீரென்று, ''சார், உதவி இயக்குநர் துரை மயக்கம் போட்டு விழுந்துவிட்டார்'' என்று ஒருவர் வந்து தகவல் சொன்னார். போய்ப் பார்த்தால், கடுமையான குளிரால் பாதிப்புக்குள்ளாகி, விரைத்துப் போய்க் கிடந்தார். உடனே அவரைத் தூக்கிக்கொண்டு போய் படப்பிடிப்புக்குப் பயன்படுத்தும் மின்சார ஜெனரேட்டர் அருகே படுக்க வைத்து, உடல் முழுவதும் சூடு பறக்கத் தேய்த்து கண் விழிக்கச் செய்தோம். வித்தியாசமான காட்சிகளைப் படம் பிடிக்க வேண்டும் என்று முயற்சி செய்யும் போது, எதிர்பாராத விதமாக இதுபோல பிரச்னைகள் வந்துவிடும். அவற்றையும் சாமர்த்தியமாகச் சமாளிக்க வேண்டும். கொஞ்சம் அசிரத்தையாக இருந்து விட்டாலும், விபரீதமான விளைவுகளைச்


* 'புதுக்கவிதை' படத்தில்

சந்திக்க நேரிடும். இன்றைக்குக்கூட டி.வி. சேனல்களில் அந்தப் பாடல் ஒளிபரப்பானால், என் மனத்தில் அந்தப் பாடலைப் படமாக்கிய பர பரப்பான நிகழ்வுகள் நினைவுக்கு வரும்.

இந்தப் படத்திலும் ஒரு ரயில் காட்சி இடம் பெற்றது. ஒரு ரயில் வேகமாகப் போய்க்கொண்டிருக்கும். ரஜினி, ரயில் பாதைக்கு இணையான சாலையில், மோட்டார் சைக்கிளில் போய்க்கொண்டிருப்பார். ரயிலில் கேமராவை வைத்து, இந்தக் காட்சியைப் படம் பிடித்தோம். ரயிலின் வேகத்துக்கு ஈடு கொடுத்து ரஜினி மோட்டார்




# எஸ்.பி.முத்துராமன்

# ரஜினி!



சைக்கிள் ஓட்ட வேண்டும். இல்லையென்றால், கேமராப் பார்வையிலிருந்து மோட்டார் சைக்கிள் மறைந்துவிடும். ரஜினி மிகச் சரியாக பைக் ஓட்டியதால், அந்தக் காட்சியைத் திட்டமிட்டபடி சிறப்பாக எடுக்க முடிந்தது. ஆனால், இந்தக் காட்சியைப் படம் பிடிப்பதற்கு ஏற்ற விதமாக ரயில் பாதையும், சாலையும் இணையாக இருக்கும் லொகேஷனைக் கண்டுபிடிக்க அலைய வேண்டியிருந்தது. கடைசியில் காஞ்சிபுரம்-அரக்கோணம் ரூட்டில் அப்படி ஒரு இடத்தைக் கண்டுபிடித்தோம். அதன் பிறகு ரயில்வேயில் அனுமதி வாங்கி படப்பிடிப்பை நடத்தினோம். ரொம்பவும் ரிஸ்க் எடுத்து, ஒளிப்பதிவாளர் பாபு பல ஷாட்களை எடுத்தார்.

கன்னட நடிகரான துவாரகிஷ், இயக்குநர், தயாரிப்பாளர் மட்டுமில்லை, ரஜினியின் நெருங்கிய நண்பர். அவர், ரஜினியை வைத்து ஒரு படம் எடுக்க விரும்பினார். என்னை இயக்கும்படி கேட்டுக்கொண்டார். அந்தப் படம்தான் 'அடுத்த வாரிசு'. அதில் ரஜினிக்கு ஜோடி ஸ்ரீதேவி. படத்தின் பல காட்சிகளை ராஜஸ்தான் மாநிலத்தில் உள்ள ஜெய்ப்பூருக்குச் சென்று படம் பிடித்தோம். லொகேஷன் பார்ப்பதற்காக ஜெய்ப்பூருக்குச் சென்ற சமயத்தில், ஒரு பெரிய ஏரியின் மத்தியில் பிரம்மாண்டமான ஓர் அரண்மனை இருப்பதைப் பார்த்தவுடன், இங்கே ஒரு பாடல்

* அடுத்த வாரிசு படத்தில் ஸ்ரீதேவி - ரஜினி



இருந்து, அந்தப் பாடல் காட்சியைப் படம் பிடித்தோம். அதில் ஒளிப் பதிவாளர் பாபுவின் திறமை பளிச்சிட்டது. அந்தப் பாடலுக்கு தியேட்டரில் ரசிகர்கள் மத்தியில் பெரும் வரவேற்பு கிடைத்தது. பத்திரிகைகளும் பாராட்டின.

ஜெய்ப்பூரில் படப்பிடிப் புக்கு, ஒரு மணி நேரத் துக்கு இவ்வளவு என்று அரண்மனைகளிலும், இதர இடங்களிலும் கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. அதற்கெல்லாம் தயாரிப்பாளர் துவாரகீஷ் அசரவில்லை.

> " 'இதய பலவீனம் உள்ளவர்கள் யாரேனும் இருந்தால் வெளியேறி விடுங்கள்'னு தலைவர் மேடைல சொல்றாரே?"
> "சொத்துக் கணக்கை வெளியிடப் போறாராம்."
> – சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

காட்சியைப் படம் பிடிப்பது என்று தீர்மானித்தோம். அதையும் வழக்கமான கோணத்தில் படம் பிடிக்காமல், உயரமான ஒரு இடத்திலிருந்து, டாப் ஆங்கிளில் படம் பிடித்தால் மிகவும் சிறப்பாகவும் வித்தியாசமாகவும் இருக்கும் என்று முடிவு செய்தோம். அந்த ஏரியிலும், அதன் நடுவில் அமைந்த அரண்மனையிலும் படப் பிடிப்புக்கு வேண்டிய அனைத்து ஏற்பாடு களையும் செய்துவிட்டு வந்தோம்.

ஏரியின் கரையிலிருந்து ஒரு படகில் ரஜினியும் ஸ்ரீதேவியும் ஏரியின் நடுவில் உள்ள அரண்மனைக்குப் போவது போன்ற பாடல் காட்சியைப் பற்றி ரஜினி, ஸ்ரீதேவி யிடம் விளக்கியபோது, "கேமராவையே காணோமே?" என்று கேட்டார் ரஜினி. "இந்தக் காட்சியை ஹெலிகாப்டரிலிருந்து டாப் ஆங்கிளில் எடுக்கப்போகிறோம்" என்று சொன்னேன். படகு புறப்பட்டது. கேமரா கண்ணுக்குப் புலப்படவே இல்லை. அதன் ரகசியம் என்ன தெரியுமா? நாங்கள் ஹெலிகாப்டரைப் பயன்படுத் தவே இல்லை. அந்த மாதிரியான ஒரு எஃபெக்டை ஹெலிகாப்டரைப் பயன் படுத்தாமலேயே கொண்டு வந்துவிட் டோம். ஏரி அரண்மனையை ஒட்டிய இன்னொரு அரண்மனையின் மேலே

**ரா**ணிக்குரிய உடையணிந்து, ஸ்ரீதேவி நடந்து வரும் காட்சி களில் அவரது நடை, உடை, பாவனை அனைத்தும், அவ்வளவு பொருத்தமாக அமைந்து, உண்மையில் ஒரு ராணி நடந்து வருவதுபோலவே இருக்கும்!

இசைஞானி, இளையராஜா 'ஆசை நூறு வகை; வாழ்வில் நூறு சுவை' பாடலை உருவாக்கியபோது, தயாரிப்பாளர் துவா ரகீஷ், "இந்தப் பாடல் சுமாராகத்தான் இருக்கிறது! இன்னும் நன்றாக ஒரு பாடல் போட்டுத்தரச் சொல்லலாமா?" என்று கேட்டார். நான் அந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளாமல், "இளையராஜாவின் பல பாடல்கள், முதல் தடவை கேட்கிறபோது சுமாராக இருப்பது போலத் தோன்றும்; ஆனால், மறுபடி, மறுபடி கேட்கிறபோது, நமக்கு அந்தப் பாட்டு மிகவும் பிடித்துப் போய்விடும். அப்படி சூப்பர் ஹிட் ஆன பாடல்கள் பலவற்றை என்னால் உதாரணம் சொல்ல முடியும்" என்றேன். துவாரகீஷும் சமாதானமானார். நான் குறிப்பிட்டது போலவே, அந்தப் பாடல் சூப்பர் ஹிட் ஆனது. சமீபத்தில்கூட ஒரு படத்தில், அந் தப் பாடலை ரீ-மிக்ஸ் செய்து இடம்பெறச் செய்தார்கள்.

**ஜெ**ய்ப்பூரிலும், இதர இடங்களிலும்

படப்பிடிப்பை முடித்துக்கொண்டு டெல்லி திரும்பிய விமானப் பயணம் வாழ்நாளில் மறக்க முடியாத ஒன்று. அந்த விமானத்தில் ஏறத்தாழ பாதி பேர் எங்கள் படப்பிடிப்புக் குழுவினர்தான். ரஜினி, ஸ்ரீதேவி, துவாரகேஷ், அவரது மனைவி, குழந்தைகள் என அனைவரும் இருந்தோம். அந்த விமானம் இடையில் ஏதோ ஒரு நகரத்தில் இறங்கி விட்டு, மறுபடி டெல்லிக்குப் புறப்பட வேண்டும். அந்த ஊரில் இறங்கும் போது, பிரச்னையாகிவிட்டது. விமானமே குலுங்கியது; பயணித்த அனைவரும் கலங்கிவிட்டோம். அனைவரும் வேண்டாத தெய்வமில்லை. அப்போது வானத்தில் பறந்த ஒவ்வொரு வினாடியும் ஒரு யுகமாக இருந்தது. ஒரு வழியாக




விமானம் பத்திரமாகத் தரையைத் தொட்டவுடன் அனைவரும் நிம்மதிப் பெருமூச்சு விட்டோம். அந்தச் சிறிய விமான நிலையத்தில், நாங்கள் பயணம் செய்தது போன்ற பெரிய விமானங்கள் தரை இறங்குவது கடினம் என்றும், அனுபவம் வாய்ந்த பைலட்களால் மட்டுமே பெரிய விமானங்களைத் திறமையாக தரை இறக்க முடியும் என்றும் தெரிய வந்தது. மரண பயம் என்பது என்ன என்று அறிந்துகொண்டதும் வாழ்க்கை அனுபவம்தானே!

**ஒரு ரயில் வேகமாகப் போய்க்கொண்டிருக்கும். ரஜினி, ரயில் பாதைக்கு இணையான சாலையில், மோட்டார் சைக்கிளில் போய்க் கொண்டிருப்பார்.**

அந்தப் படத்தில் வில்லனாக நடித்தவர் செந்தாமரை. அவருக்கு ரஜினியை சவுக்கால் அடிக்கும் மிகவும் வில்லங்கமான வில்லன் கதாபாத்திரம். அவரிடம் படப்பிடிப்பின்போதே, 'படம் ரிலீஸ் ஆகி ஒரு மாதத்துக்கு எங்கேயும் தனியாகப் போய் ரஜினி ரசிகர்கள் மத்தியில் மாட்டிக்கொள்ளாதீர்கள்; உண்டு இல்லை என்று ஆக்கிவிடுவார்கள்' என்று எச்சரிக்கை செய்திருந்தோம். ஆனால், அவர் எதிர்பாராத விதமாக ஒரு தியேட்டரில் ரஜினி ரசிகர்கள் மத்தியில் மாட்டிக்கொள்ள, அவர்கள் கோபாவேசப்பட, "படத்தில் அடித்தது நடிப்பு; உண்மையில் நானும் ரஜினியும் நல்ல நண்பர்கள்!" என்று சொல்லி ஒருவாறாகச் சமாளித்தார். அவருக்கு அதிர்ஷ்டம், பத்திரமாக வீடு போய்ச் சேர்ந்தார்!

சென்னை ஆனந்த் தியேட்டர் அதிபர் ஜி.உமாபதி அவர்கள், யாரிடம் பேசினாலும் அடிக்கடி உபயோகிக்கும் வார்த்தை: 'என்னம்மா கண்ணு!' அதையே வில்லனுக்கு பஞ்ச் டயலாக்காக வைத்து ஒரு படம் எடுத்தோம்.

**(பயணம் தொடரும்)**

எழுத்து வடிவம் :
**எஸ்.சந்திரமௌலி**

# மூன்றாவது

உலகத்தில் மூன்றாவது மனிதன் தோன்றியதற்கு அப்புறம் ஒட்டுக் கேட்பது ஆரம்பமாகியிருக்கலாம். கி.மு., கி.பி. என்று எத்தனையோ நூற்றாண்டுகளில் மூடிய கதவுக்கு அந்தப் பக்கம் இருந்து காதை வைத்துத்தான் ஒட்டுக் கேட்பது வழக்கம். மார்க்கோனி பிறந்து ரேடியோவைக் கண்டுபிடித்ததும் அறிவியலை வைத்து ஒட்டுக் கேட்பது ஜாம்ஜாமென்று தொடங்கியது. பேச்சு சத்தத்தை அதிகப்படுத்த ஒரு மைக். அதை கண்காணாத தூரத்துக்கு ஒலிபரப்ப ஒரு டிரான்ஸ்மிட்டர் என்று அடிப்படை ரேடியோ சாதனங்களை கைக்கு அடக்கமான சைஸில் குறுக்கினால் கிடைப்பது என்ன? ஒட்டுக் கேட்கும் ஒரு உன்னதமான கருவி. ஆங்கிலத்தில் செல்லமாக பக் (Bug). தனி மனித அளவில் ஒட்டுக் கேட்கிற அற்ப விஷயம், இந்த ஒட்டுண்ணிப் பூச்சி தயவால் இன்டர்நேஷனல் ரேஞ்சில் அரங்கேறி, ஒரு நாடு மற்ற நாட்டை வேவு





பார்ப்பது கடந்த எழுபது வருடங்களாக நடைமுறையில் உள்ளது. அதுவும் இந்த வல்லரசுகள் அடிக்கிற கொட்டம் தாங்க முடியலை சாமி!

சீனாவில் ஏழெட்டு வருடங்களுக்கு முன்னால் ஒரு விமானம் வாங்கினார்கள். சீனப் பிரதமர் நாலு நாள் நல்லெண்ண விஜயமாக உலக நாடுகளுக்குப் போய்வர, ஸ்பெஷலாக அமெரிக்காவில் ஆர்டர் கொடுத்து வர வழைத்தது. புது விமானத்தை டெட்டால் போட்டுக் கழுவித் துடைத்து, சென்டிமீட்டர் சென்டிமீட்டராக ஆராய்ந்தபோது, விமானத்தோடு இலவச இணைப்பாக வந்த சமாசாரங்களும் கண்ணில் பட்டன. பிளேனின் அலுமினியச் சுவர், கூரை என்று பாத்ரூமைக்கூட மிச்சம் வைக்காமல் மறைத்து வைத்திருந்த ஒட்டுண்ணிக் கருவிகள் அவை!

துருவிக் கண்டுபிடிக்க வாய்ப்பு உள்ள காரணத்தால், ஒட்டுண்ணிக் கருவி போய் லேசர் வந்தது. ஒட்டுக் கேட்க வேண்டிய இடத்தில் சுவரில் காலண்டர், புகைப்படம் என்று ஏதாவது இருக்காமல் போகாதே. நாம் ஓர் அறையில் உட்கார்ந்து பேசும்போது ஒலியலைகள் எழுந்து, இந்த சாதுவான பொருட்கள் கண்ணுக்குத் தெரியாமல் மெல்ல அதிரும். அறைக்கு வெளியே தூரத்தி

லிருந்து ஒரு லேசர் கதிரை அந்தப் படத்திலோ காலண்டரிலோ செலுத்தினால் போதும். படத்திலிருந்து திரும்ப வருகிற லேசர் கதிர், பேச்சு வார்த்தை நடக்கும்போது படம் அதிர்வதை வைத்துத் தொடர்ந்து மாறுபடும். இந்த மாறுபாட்டை வைத்து முழுப் பேச்சையும்



# கண்!

சுலுவாக வெளியே உருவாக்கிவிடலாம். ஒலிபெருக்கியில் வைத்த டயப்ரம் மூலம் ஒலியலையை ஊருக்கே கேட்க வைப்பது போன்றது இது.

செல்ஃபோன் கண்டுபிடித்த பிறகு ஒட்டுக் கேட்கும் உன்னதமான செயலுக்கு அதுவும் பயன்பட ஆரம்பித்தது. செல்ஃபோனை உற்பத்தி செய்யும்போதே இதற்கான ஒரு மென்பொருள் (சாப்ட்வேர்) அதில் போட்டு வைத்தால் போதும். அல்லது தொலைபேசி சுவிட்ச் ஆன் செய்து இருக்கும்போது மைக்ரோ

## டிஜிட்டல் கேன்டீன்-3

அலை மூலமாக அனுப்பி அந்த செல்ஃபோனில் இறக்கிவிடலாம். **இந்த சாப்ட்வேர் மூலம் சுவிட்சை அணைத்து பாக்கெட்டில் போட்ட உங்கள் மொபைல் உங்களுக்குத் தெரியாமல், விளக்கு எரியாமல் ஜாக்கிரதையாக சுவிட்ச் ஆன் ஆகும். வெளியே ஒரு குறிப்பிட்ட எண்ணுக்கு இணைப்பு உருவாகும்.** அப்புறம் நீங்கள் ஆண்டிப்பட்டியில் அரட்டை அடிக்கிறதை, ஆஸ்திரேலியாவில் ஏசி அறையில் உட்கார்ந்து வார்த்தைவிடாமல் கேட்க முடியும். செல்ஃபோன் உற்பத்தியாளர்கள் இப்படியான பாதுகாப்பு ஓட்டைகளைப் பெரும்பாலும் அடைத்துவிட்டதாகத் தகவல்.

ஆனாலும், ஃபோனில் பேட்டரி அடிக்கடி சார்ஜ் இல்லாமல் போனால் ஜாக்கிரதை.



நீங்க நேற்று உங்க காதலியை மெரினா கடற்கரைக்கு வரச் சொன்னது, உங்கள் அபிமான சுண்டல்காரரால் ஒட்டுக் கேட்கப்பட்டிருக்கலாம். 'டேய் தம்பி, நம்ம பார்ட்டி இன்னிக்கு சாயந்திரம் பீச்சுலே கடலை போட ஜோடியைக் கூப்பிட்டிருக்கான். சுண்டலுக்கு இன்னும் ரெண்டு கிலோ கடலை ஊறப்போடு.'

**இரா.முருகன்**

ப்ரிஸ்கிரிப்ஷன்

● இப்போதெல்லாம் முதுகுத் தண்டில் மயக்க மருந்தைச் செலுத்தி வலியில்லாத பிரசவம் பார்க்கிறார்களே, இதனால் கர்ப்பவாய் இயக்கம் ஒழுங்கின்றிப்போய்விடாதா? தவிர, இந்த முறையில் பிறக்கும் குழந்தைக்கு ஏதாவது பாதிப்புநேர வாய்ப்பு உண்டா?

– ஆர்.பானுமதி, கோவை

**மயக்க மருந்து நிபுணர் டாக்டர் மனு லக்ஷ்மியின் விளக்கம்:**

''பிரசவ வலியை அனுபவிக்காமல் இருக்கத்தான் முதுகுத்தண்டில் இந்த ஊசி மருந்தைச் செலுத்துகிறோம். அடி முதுகில் இந்த ஊசி மருந்து போடப்படும்போது தாயினால் வலியை உணர முடியாது. அவ்வளவுதான். மற்றபடி கருப்பையின் இயக்கங்கள் வழக்கமான பிரசவத்தில் இருப்பதுபோலத்தான் இதிலும் இருக்கும். பொதுவாக, ஏழு மணிநேரத்துக்கு ஒருமுறை பிரசவ வலி தோன்றக்கூடிய கட்டத்தில் இதைச் செலுத்துவோம். மேலை நாடுகளில் பத்து வருடங்களுக்கும் மேலாக எபிட்யூரல் எனப்படும் இந்த நடைமுறை இருந்து வருகிறது. நம் நாட்டில் நாலைந்து வருடங்களுக்கு முன்பு அறிமுகமான இந்தச் செயல்முறையை, நகரங்களில் பிரசவிக்கும் பாதித் தாய்மார்கள்

# முதுகுத்தண்டில்



* மனு லக்ஷ்மி

ஏற்க முன்வருகிறார்கள். இந்த முறையினால் தலைவலி, முதுகுவலி போன்ற பக்கவிளைவுகள் ஓரளவு இருக்கலாம். ஆனால் அவை தற்காலிகமானவை.''



• என் தோழிக்கு தைராய்டு பிரச்னை உண்டு. இதற்காக சிகிச்சை எடுத்துக் கொள்கிறாள். அவள் விழிகள் முகத்திலிருந்து தெறிப்பதுபோல் வெளிவந்துள்ளதாகத் தோன்றுகிறது. சிகிச்சைக் கான மருந்தை உட்கொள்வதன் பக்கவிளைவாக இது இருக்குமோ?

**- வைதேகி, சென்னை**



பூபதி

**அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் பூபதியின் விளக்கம்:**

''காரணத்தையும் விளைவையும் மாற்றிப் புரிந்துகொண்டிருக்கிறீர்கள். தைராய்டு அதிகமாக சுரப்பதை exo thalamus என்போம். பொதுவாக இந்த நிலை பதினைந்திலிருந்து இருபத்தைந்து வயதுக்குட்பட்ட பெண்களிடம் பரவலாக இருக்கிறது. படபடப்பு, மாறி மாறித் துடிக்கும் நாடி போன்றவை இதற்கான சில அறிகுறிகள். ஏதோ ஆட்டுக்கு இருப்பதைப்போல கண்கள் முன்புறமாக வந்து தோற்றமளிக்கவும் வாய்ப்பு உண்டு. இது Grave's Disease எனப்படுகிறது. தொண்டையின் வெளிப்புறத்தில் சிறிய கட்டி போலவும் தைராய்டு சுரப்பி வீக்கமடையலாம்.''

## அடி முதுகில் இந்த ஊசி மருந்து போடப்படும்போது தாயினால் பிரசவ வலியை உணர முடியாது.

# ஊசி!



# காதல் ஸ்கேனிங்!

"நீங்க நடிக்க வந்ததுக்கு முந்தி இருந்ததுக்கும், நடிகை ஆனபிறகு உள்ளதுக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறதா உணர்றீங்க?"

"முன்னாடி 'துணி'வுள்ள பெண்ணா இருந்தேன்; நடிகை ஆனபிறகு அது போயிடிச்சு!"

– சீர்காழி வி.ரேவதி



"அவருடைய மூன்று பிள்ளைங்களும் பெரிய கிரிக்கெட் வீரர்கள்!"

"அதான் அவரை நீ காப்பாத்து, நான் காப்பாத்துன்னு 'ஏலம்' போடறாங்களா?"

– சம்பத்குமார்



"தலைவரே! கட்சில இளைஞர்களுக்கும், பெண்களுக்கும் வாய்ப்பு வழங்கப்படும்னு சொன்னீங்களே?"

"ஆமா, என் பேரப்பசங்க நாலு பேருக்கும், பேத்திங்க ஆறு பேருக்கும் மினிஸ்டர் போஸ்ட் தந்திருக்கேனே!"

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்





"அண்டை நாட்டிலிருந்து தூது ஓலை வந்து ரொம்ப நாளாச்சே... ஏன்?"

"அனுப்பி வச்ச 88 புறாக்களுக்கு கணக்கு கேட்டுக் கேட்டு உசுரை எடுத்திட்டிருக்காங்க மன்னா!"

– பி.ஜி.பி. இசக்கி

"டாக்டரைக் காதலிச்சது தப்பாப் போச்சா, ஏண்டி?"

"'என் இதயத்தில் நீங்க இருக்கீங்க'ன்னு சொன்னேன். 'வா, ஸ்கேன் எடுத்துப் பார்த்துடலாம். அப்பதான் நம்புவேன்'ங் கறாரே!"

– லலிதா செல்லப்பா



ஒவ்வொரு கோயிலிலும் உள்ள சமையல் அறைதான் மடப்பள்ளி. கோயிலின் தென் கிழக்கு மூலையான அக்னி மூலையில் மடப்பள்ளியை அமைப்பார்கள். நீண்ட கோட்டை அடுப்புகள் வெட்டி, விறகினால் அடுப்பெரித்து, பெரிய பெரிய அண்டாக்களில் வகை வகையான பிரசாதங்கள் தயாரித்து, ஒவ்வொரு கால பூஜையின்போதும் நைவேத்யம் செய்வார்கள். 'நாங்கள் உண்ணுவதெல்லாம் உன்னால் கிடைத்தது' என்று நன்றி பாராட்டுவதுதான் நைவேத்யம். வைணவ ஆலயங்களில் இதை 'கண்டருளப் பண்ணுதல்' என்றோ 'அமுது செய்வித்தல்' என்றோ வழங்குவார்கள். மனிதனின் ஆன்ம பசிக்கு உணவளித்து பக்தி வளர்க்கும் ஆலயங்கள், அவனது வயிற்றுப் பசிக்கு உணவளிக்கும் அறநிலையங்களா கவும் விளங்கி வருகின்றன.

# மடப்பள்ளி மகாத்மியம்!

த.கி.நீலகண்டன்



அந்த நாட்களில், மண்பாண்டங்களில்தான் சமையல் செய்வார்களாம். கோயில்களில் அன்றாடம் புதுப் பானையைத்தான் உபயோகிப்பார்களாம். அந்தந்த வேளைக்குச் சமையல் ஆனதும் பானைகளை உடைத்து விடுவார்களாம்! அதற்கென்று பானைகள் செய்து தந்த குயவருக்குப் பரம்பரையாகத் தனி நிவந்தங்கள் இருந்தனவாம்.

சமைத்த உணவைக் கொட்டி ஆற வைக்கவும், சித்ரான்னங்களைக் கலந்து தயார் செய்யவும் மடப்பள்ளியில் பெரிய கற்பலகைகளை மேடைபோன்ற அமைப்பில் பதித்து வைப்பார்கள். இந்தக் கற்களுக்கு 'படைகல்' என்று பெயர். விறகு அடுக்கத் தனி இடம், பண்டங்களைப் பாதுகாக்கும் உக்கிராண அறை, நீர் மொள்ளத் தனிக் கிணறு என்று எல்லாமே மடப்பள்ளிக்குள் அடங்கியிருந்தன.

மடப்பள்ளியில் தயாரான பிரசாதங்களைச் சிறுபாத்திரங்களில் வைத்து மூடி சன்னதிக்கு எடுத்துச் சென்று நிவேதனம் செய்வார்கள். எடுத்துச் செல்பவர் மூக்கையும் வாயையும் ஒரு துணியால் கட்டிக் கொண்டு போவார். இறைவனுக்கு அர்ப்பணம் செய்யும் முன், பிரசாதங்களை மூக்கினால் முகரக் கூடாது, வாயிலிருந்து வரும் எச்சில் காற்று படக்கூடாது என்று இந்த ஏற்பாடு. பெரிய கோயில்களில், குடை, மேள தாளம் இவற்றோடு நைவேத்யம் மடப் பள்ளியிலிருந்து செல்லும். சிதம்பரத்தில் நைவேத்திய வகைகளை எடுத்துச் செல்ல விசேஷ அமைப்புள்ள தாம்பாளம் உண்டு. நடுவில் பெரிய குழியும், அதைச் சுற்றி சிறுசிறு குழிகளுமாக அமைந்த இந்த தாம்பாளத்தில் எல்லா வகை நைவேத்யங்களையும் தனித்தனியாக வைத்து, மூடி, தலைமேல் சுமந்து செல்வார்கள். குழித்தளிகை அல்லது குழுமத் தளிகை என்று இதற்குப் பெயர். பெருமளவில் சமைத்த உணவு வகைகளை பெரிய பெரிய தட்டுகளிலும், ஓலையில்

முடைந்த தட்டுகள் மீது துணி பரப்பி அதன் மீது கொட்டியும், அப்படியே நிவேதனம் செய்வதும் உண்டு. இதற்கு, 'திருப்பாவாடை' என்று பெயர். திருப்பதி யில் திருப்பாவாடை சமர்ப்பிப்பதற் கென்று வெள்ளியில் பெரிய பீடம் ஒன்றைச் செய்து வைத்திருக்கிறார்கள்.

உடுப்பி கிருஷ்ணர் கோயிலில், ஸ்ரீ கிருஷ்ணர், தாமே மடப்பள்ளிக்கு எழுந் தருளி, நைவேத்யம் ஏற்பாராம்! அன்னை ஊட்டும் வரை பசி தாளாத சிறு குழந்தை, தானே சமையல் அறைக்குச் சென்று கைக்குக் கிடைத்ததை எடுத்துச் சாப்பிடும் அல்லவா? அதைப்போல!

மடப்பள்ளியில் அன்னபூரணியையோ, தான்ய லக்ஷ்மியையோ பிரதிஷ்டை செய்தி ருப்பார்கள். (வைணவ ஆலயங்களில் தான்ய லக்ஷ்மியை மடப்பள்ளித் தாயார் என்பார்கள்). திருப்பதியில் 'பொட்டு' என வழங்கும் மடப்பள்ளி, பெருமாளின் வளர்ப்புத் தாயான வகுளமாலிகா என்கிற பெருமாட்டியின் நேரடி மேற்பார்வையில் நிர்வகிக்கப்படுகிறது. அப்பெருமாட்டிக்கு மடப்பள்ளிக்குள்ளேயே ஒரு சிறு சன்னிதி இருக்கிறது. பெருமாளின் முகவாயில் ஆறாத புண் இருப்பதால், அவருக்கு எண் ணெய் மிளகாய் தாளிதம் கிடையாதாம். நெய்யும் மிளகும்தான் உபயோகிக்க வேண்டு மாம். இதைக் கவன மாகப் பார்த்துச் செய்ய வேண்டி, அப்பெரு மாட்டி, தானே சமையல் வேலைகளை நேரடியாக மேற்பார்வை செய்கிறா ராம்! என்ன கரிசனம் பாருங்கள்!

சிதம்பரம் சபாநாய கர் கோயில் மடப்பள்ளி மிகப் பெரிது. தில்லை வாழ் அந்தணர்கள் அத் தனை பேருக்கும், கோயி லிலிருந்து பிரசாதம் அனுப்பும் முறையினால், சதா சர்வ காலமும் இந்த மடப்பள்ளியில் சமையல் ஆகிக் கொண்டே இருக்கும். ஒரு கிரகண தினத்தன்று, அடுப்பு ஓய்ந்திருந்த சம யத்தில் இந்த மடப்பள்ளியைக் காண சந்தர்ப்பம் வாய்த்தது!

**சில வித்தியாசமான நைவேத்ய வகைகள்:**

| | |
|---|---|
| மதுரை | – முக்குறுணி மோதகம் |
| சிதம்பரம் | – சம்பா (மிளகு, சீரகம் சேர்த்த) அன்னம், கத்திரிக்காய் கொத்ஸு, கல்கண்டு பொங்கல், இரவில் பால் அன்னம். |
| மன்னார்குடி | – கொழுக்கட்டை |
| திருவாரூர் | – நெய்த் தேன்குழல், பிட்டு, சுகியன் |
| இராமேஸ்வரம் | – தோசை, பருப்புத் துவையல் |
| குற்றாலம் | – மூலிகைக் கஷாயம் (இரவில்) |
| உப்பிலியப்பன் கோயில் – | |

தமிழ்நாட்டில் மட்டுமல்லாது, இந்தி யாவின் பல்வேறு மாநிலத்துக் கோயில் களிலும் மடப்பள்ளி ஒரு பிரதான அங்கம். உடுப்பி கிருஷ்ணர் கோயிலின் மடப்பள்ளி யில் காலம் தவறாமல் வந்தவர்களுக்கெல்லாம் உணவு படைக்கிறார் கள். தொடர் மழை பெய்யக்கூடிய ஊரான உடுப்பியில், அடுப் பெரிக்க விறகு சேர்த்து வைப்பது ஒரு தனி ஏற்பாடு. கிடைக்கும் விறகுகளை ஒரே சீராக உடைத்து, ஒரு தேர் போன்ற அமைப்பில் அடுக்கி வைத்திருக் கிறார்கள்! இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு

**இந்தியாவின் பல்வேறு மாநிலத்துக் கோயில்களிலும் மடப்பள்ளி ஒரு பிரதான அங்கம்.**



| | உப்பு சேர்க்காத அன்ன வகைகள் |
|---|---|
| திருக்கண்ணபுரம் – | முனியோதரன் பொங்கல் (வெண் பொங்கல்) |
| ஸ்ரீரங்கம் – | காலையில் கோதுமை ரொட்டி, பருப்பு இரவில் அரவணை (கேசரி) |
| காஞ்சிபுரம் – | குடலை இட்லி |
| உடுப்பி – | பொறி / அவல் உருண்டை |
| குருவாயூர் – | பால் பாயசம் |
| அம்பலப்புழை – | நெய் பாயசம் |
| கொட்டாரக்கரை – | நெய் அப்பம் |
| திருவனந்தபுரம் – | உப்பும் வடுமாங்காயும் (கன்னிமாங்காய்) |

அளிப்பதே முக்கிய குறிக்கோள். மிக நவீனமான உபகரணங்களுடன், பிரம் மாண்டமான நீராவிக் குக்கர்களில் எப் போதும் அன்னம் வடித்துக்கொண்டே இருக்கிறார்கள். பரிமாறும் கரண்டிகளின் அளவைப் பார்த்தாலே போதும். பசி ஆறிவிடும். தள்ளுவண்டியில் வைத்துச் சுடச்சுட அன்னம், குழம்பு, ரசம் என்று வந்தவர்களுக்கெல்லாம் விருந்துபசாரம் தான்! கேரளாவிலும் தேங்காய் உரிமட்டை யில் அடுப்பெரித்து, பெரிய பெரிய



முறை கோயிலின் பூஜை, நிர்வாகம் ஆகியவை, அவ்வூரிலுள்ள அஷ்டமடங்களிடையே சுழற்சி முறையில் கைமாறும். அப்போது, பணம், பண்டம், பாத்திரம், நகை இவற்றோடு, விறகு கையி ருப்பும் முறையாகக் கணக்கிட்டு ஒப்ப டைக்கப் படுகிறது!

இதே கர்நாடகத்தில் தர்மஸ்தலா என்கிற தலத்தில் யாத்ரிகர்களுக்கு உணவு

வாயகன்ற உருளிகளில் பிரசாதங்கள் தயாரித்து, நைவேத்யம் ஆனதும் 'ஊட்டுப்புரை'யில் வைத்து பக்தர்களுக்குப் பரிமாறுகிறார்கள்.

ஒரிஸ்ஸா மாநிலத்தில் உள்ள பூரி ஜகந்நாதர் ஆலயத்திலும், மிக பிரம்மாண்ட மான அளவில் பிரசாதம் தயாரிக்கிறார்கள். ஆண்டுக்கு ஒருமுறை புதிதாகக் கட்டப் படும் ஜகன்னாதர் தேரின் மரச் சட் டங்களை, திருவிழா முடிந்ததும் சமையல் கூடத்தில் விறகாகப் பயன்படுத்திவிடுவார் களாம்! ●

# ஜிலு ஜிலு தொடர்கதை -3

தையூர் பண்ணையாரின் தோப்புக்குள் சுவரேறிக் குதித்து பத்மநாபன் பம்ப் செட் கிணற்றை அடைந்தபோது அவனது நண்பர்கள் ஏற்கெனவே கிணற்றுக்குள் குதித்திருந்தார்கள்.

''ஏண்டா லேட்டு?'' என்றான் பனங்கொட்டை என்கிற ரவிக்குமார். பண்ணையார் கிணற்றை நாரடிப்பதற்காகவே திருவிடந்தையிலிருந்து சைக்கிள் மிதித்து வருகிறவன்.

''ட்ரீம்ஸ்ல இருந்திருப்பான்டா. டேய் குடுமி, லவ் மேட்டரெல்லாம் நமக்குள்ள மட்டும்தான்டா பேசிக்கணும். பொண்ணுங்க கிட்டபோய்ச் சொல்லி அது பிரச்னையாகி பெரிசாச்சன்னா உஸ்கோல்ல டி.சி. குடுத்துருவாங்கடா'' என்றான் மோகனசுந்தரம்.

எந்த ரகசியத்தை யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று பத்மநாபன் தனக்குள்ளே மட்டும் பொத்தி வைத்துப் பாதுகாத்து வந்தானோ அந்த விஷயத்தை முன் தினம் போட்டு உடைக்க வேண்டியதாகிவிட்டது. வகுப்பில் அவன் வளர்மதியிடம் நீட்டிய தாள் என்ன?

முதல் வினா, கலியமூர்த்தியிடமிருந்து வந்தது. அப்படியா? லெட்டரா குடுத்தான் என்று முதல் பெஞ்ச் பன்னீர் செல்வம் ஆர்வத்துடன் நாக்கைத் துருத்திக்கொண்டு முன்னால் வந்தான்.

இது விபரீதம் என்று பத்மநாபனுக்குத் தோன்றிவிட்டது. அதிர்ஷ்டம் ஓரளவு அவன் பக்கம் இருந்தபடியால் வளர்மதி அழுது ஆகாத்தியமெல்லாம் பண்ணாமல் வாங்கிய கடிதத்தைப் பையில் வைத்துக்கொண்டு வெளியே போய்விட்டாள். ஒரு வேளை அது காதல் கடிதம் என்று அவளுக்குத் தோன்றாதிருந்திருக்கலாம். பத்மநாபன் சொல்லித்தான் கொடுத்தான். ஆனாலும் காதில் விழாமல் போயிருக்கக் கூடும்.

புத்திக்குத் தெரிந்திருக்காதா என்ன? பகா எண்கள் பற்றியா எழுதிக் கொடுத்திருப்பான்?

அது தனக்கும் அவளுக்குமான ஒரு மௌனப் போராட்டம் என்பதாக அவன் தன் மனத்துக்குள் கருதியிருந்தான். தன் காதலை அவள் ஏற்றுக்கொண்டுவிடுகிற பட்சத்தில், தனது நட்பு வட்டத்தையே மாற்றி அமைத்து முதல் பெஞ்ச் பன்னீருடன்கூட நட்பு பேணத் தயாராக இருந்தான். பெண்களுக்கு முதல் பெஞ்ச் பசங்களை ஏனோ மிகவும் பிடித்திருக்கிறது. நெற்றியில் திருநீறு வைத்துக்கொண்டு, நோட்டைத் திறந்ததும் 'உ' போடுகிறவர்கள் அவர்களைப் பொறுத்தவரை உலக உத்தமர் காந்தியடிகளுக்கு அடுத்த படியில் இருப்பவர்கள்.




''டேய், அவகிட்ட என்ன குடுத்தே?'' கலியமூர்த்திதான் கேட்டான்.

''என்னது? என்னது?'' என்றான் பத்மநாபன். உள்ளுக்குள் உஷாராகிக் கொண்டிருந்தான்.

''எல்லாம் பாத்துட்டோம். மரியாதையா நீயே சொல்லிடு. லவ் லெட்டரா?''

''இல்லியே?''

"சும்மா கதவிடாத. அவ நேரா அவங்க தாத்தா கிட்ட போயி குடுக்கப்போறா. மொதலியாரு வெலக்கு மாறத் தூக்கிக்கிட்டு உங்க வீட்டாண்ட வந்து நிப்பாரு. ஏண்டா இப்படியெல்லாம் பண்ற?"

பத்மநாபனுக்கு லேசாக பயம் வந்தது. ஆத்திரம் மிகுந்த ஒரு கணத்தில் கடிதத்தைக் கொடுத்துவிட்டான். முன்னப் பின்ன வேறு யாருக்கும் இவ்வாறெல்லாம் கொடுத்த தில்லை.

அது குறித்து அவன் யோசித்திருக்கவில்லை. எனவே கவலை கொண்டான்.



''டேய் மூர்த்தி, உன்னை என் பெஸ்ட் ஃப்ரெண்டா நினைச்சி சொல்லுறேன். ஆமா, லவ் லெட்டர்தான் குடுத்தேன்.''

கலியமூர்த்தி கங்கைகொண்ட சோழன் போல் பெருமிதப் புன்னகை புரிந்தான். ''நெவர்சேன். சரி, கவலைப்படாத. நான் திங்க் பண்றேன். கண்டிப்பா ஒரு ஐடியா சிக்கும்'' என்றவன், ஒரு கணம் இடைவெளிவிட்டு ''கீழ் கையெழுத்து போட்டிருக்கியா?''

பத்மநாபன் யோசித்தான். சரியாக நினைவில்லை.

''சரியா ஞாபகம் இல்லடா''

''போடாம இருந்தேன்னா நாளைக்கு ஒரு ப்ராப்ளம்னு வந்தா அது நான் குடுக்கலன்னு சொல்லிடலாம்.''

அடடே, எத்தனை சிறந்த யோசனை! உண்மைத் தோழன் மட்டும்தான் இப்படியெல்லாம் உதவுவான். கடவுளே, நான் கையெழுத்துப் போடாமல் இருக்க வேண்டும்.

''மூர்த்தி, ரொம்ப தேங்ஸ்டா. கையெழுத்துப் போடலனுதான் நினைக்கறேன். ஆனா, இந்த விஷயத்த நீ யாராண்டயும் சொல்லாதடா.''

''சேச்சே. இதெல்லாம் உன் பர்சனல் விஷயம். நான் யாராண்டயும் சொல்ல மாட்டேன்'' என்று நம்பிக்கை சொல்லிவிட்டு, சத்துணவுக்கூடத்துக்குப் பின்புறமிருக்கும் வேலிக்காத்தான் புதர் அருகே போய் உட்கார்ந்துகொண்டு ஒவ்வொருத்தரையாகக் கூப்பிட்டுச் சொல்ல ஆரம்பித்துவிட்டான்.

''நீ ஒரு கூமுட்டடா. கலியமூர்த்தியாண்ட ஏன் மேட்டரச் சொன்ன? என்னாண்ட சொல்லியிருக்கலாம்ல?'' என்று பனங்கொட்டை கேட்டான்.

''இவரு ரொம்ப ஒக்யம். பாபு ஜெயலலிதாவ லவ் பண்றேன்னு உன்னாண்ட தானே சொன்னான். நீ என்னா செஞ்ச? நேருக்கா போயி அவங்கம்மாவாண்ட சொல்லி மாட்டிவுட்ட இல்லை?''

''அது வேற இதுவேற. அப்ப அவன் என்னிய சாஃப்ட் பால் டீம்ல சேத்துக்கமாட்டேன்னு சொல்லிட்டான்.''

''க்ளாரா, சரவணன் லவ்வு கெட்டதும் உன்னாலதான். மறந்துடுச்சா?''

''போடாங். என்னிய ஒழுங்கா நம்பினா கண்டிசனா லவ்வுக்கு ஹெல்ப் பண்றவன் நான். பாஸ்கருக்கு எத்தன வாட்டி நான் லெட்டரு கொண்டுபோயிக் குடுத்திருக்கேன் தெரியுமா? வந்தான்னா கேட்டுப்பாரு.''

## மலைக் கள்ளன்

**ரா**ஜ்கிரண் மீண்டும் இயக்குநர் அவதாரம் எடுத்துவிட்டார். ''கொஞ்ச காலமாக சினிமாவுல எனக்கு கேப் விழுந்துடுச்சு. ஆனா, ஐம்பத்தெட்டு வயசானாலும் எனக்கு மக்கள் மனசுல இன்னமும் ஓர் இடம் இருக்கு. அதனால்தான், என்னோட ரெட்சன் ஆர்ட்ஸ் மூலமா மறுபடியும் படம் தயாரிச்சு இயக்க முடிவு பண்ணிட்டேன். முத்துராமன், கே.ஆர்.விஜயா நடிச்ச 'தீர்க்க சுமங்கலி' படத்தைத்தான் மொதல்ல ரீமேக் பண்ண நினைச்சேன். ஆனா, அந்தப் பட ரைட்ஸ் சில காரணங்களால கிடைக்கல. இப்போ புரட்சித் தலைவரோட 'மலைக்கள்ளன்' டைட்டிலை வாங்கி புதுக் கதை தயார் பண்ணிட்டேன். கிராமத்து மனுஷனா ரத்தமும் சதையும் கலந்து 'மக்கள் ராசா'வா வந்து நிக்கப் போறேன். ஜனங்க ஆசீர்வாதம் இருக்குற வரை தொடர்ந்து படம் பண்ணிட்டே இருப்பேன்'' என்கிறார் ராஜ்கிரண். 'படத்தில் வடிவேலு உண்டா?' என்றால், ''அவர் பெரிய ஸ்டார். என் படத்துல நடிப்பாரான்னு தெரியல'' என்கிறார்!

– சகுந்தலா

**ஞா**யிறு ஆனால் பத்மநாபனும் நண்பர்களும் தூங்கி எழுந்ததும் கிணற்றுக்கு வந்துவிடுவார்கள்.

கண் சிவக்கும் வரை குதித்துக் குளித்துவிட்டு, கையோடு இரண்டொரு மாங்காய் அடித்துச் சாப்பிட்டு விட்டுப் பொடி நடையாக வீடு போய்ச் சேர்ந்தால், மதியச் சாப்பாட்டுக்குச் சரியாக இருக்கும்.

''தபார் குடுமி, நீ லெட்டர் குடுத்தது தப்புன்னு சொல்லல. ஆனா, எங்களாண்ட ஒருவார்த்த கேட் டுட்டுக் குடுத்திருக்கலாம். எதனா ப்ராப்ளம் வரு மான்னு நாங்க திங்க் பண்ணியிருப்பம்ல?''

''ஒண்ணும் வராதுடா. இன்னிக்கு சண்டே. ஒரு நாள் எப்படியாச்சும் போயிருச்சின்னா நாளைக்கு அவ ஸ்கூலுக்கு வந்துடுவா. அப்ப தெரிஞ்சிட்டுப் போவது!''

''அவ ஒண்ணும் சொல்லலன்னா?''

''அதெப்பிடிடா சொல்லாம இருப்பா? ஒண்ணு, சரின்னு சொல்லணும். இல்லன்னா அவங்க தாத்தாவையாவது இட்டுக்கினு வரணும்'' என்றான் பணங்கொட்டை.

பத்மநாபனுக்கு அவன்மீது மிகவும் சந் தேகமாகவே இருந்தது. அப்படியே கிணற் றடிக்குத் தள்ளிக்கொண்டுபோய் அமுத்திவிட்டால் என்ன?



அடக்கிக்கொண்டான். யார் என்ன சொன் னாலும் தன் காதல் அப்பழுக்கில்லாதது. உள்நோக்கம் அதில் கிடையாது. நான் அவளைக் காதலிக் கிறேன். அவ்வளவு தான். அவள் ஏற்றுக் கொண்டாலும் சரி, இல் லாவிட்டாலும் சரி.

ஒரு சௌகரியம். அது ஒரு சந் தோஷமும்கூட. இனிமேல் வெளிப்படையாகப் பள்ளி வளாகத்தில் யாரும் வளர்மதியைக் காதலிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டிருக்க மாட்டார்கள். வளர்மதி குறித்துப் பேச்சுவந்தால், 'அவ குடுமியோட ஆளுடா' என்பார்கள்.

**அ**ன்றைக்குப் பத்தரைக்கெல்லாம் குளியல் ஆட்டம் முடிவடைந்துவிட்டது. நண்பர்கள் அனை வரும் துடைத்துக் கொண்டு துணிகளைப் பிழிந்து தோளில் போட்டுக்கொண்டு வழியில் தென்படும் கொய்யா, மாங்காய் வகையறாக்களை டிராயர் பைகளில் திணித்தபடி பேசிக் கொண்டே தோப்பைவிட்டு வெளியேறினார்கள்.

''ரைட்டா குடுமி, நாளைக் குப் பாப்போம்'' என்றான் பணங்கொட்டை. மற்ற அனை வரிடமும் சொல்லிக்கொண்டு விடைபெற்றான்.

வளர்மதி தன் காதலை ஏற்றுக் கொண்டுவிடுகிற பட் சத்தில் இவர்கள் யாருமே ஒரு பொருட்டில்லை. ஞாயிற்றுக் கிழமை காலைகளை கிணற் றுக்குப் போய் குதித்து வீணாக் கிக்கொண்டிருக்க வேண்டிய அவசியமுமில்லை. மாறாக, வளர்மதியை அழைத்துக் கொண்டு திருவான்மியூர் ஜெயந்திக்கு பாயும் புலி பார்க் கப் போய்விடலாம். அடடே, பணத்துக்கு என்ன செய்வது?

இவ்வாறெல்லாம் நடக்க வாய்ப்பில்லாதவற்றை யோசிக் கிறோம். என்பதை அறிந்தே அவன் அது குறித்து யோசித் துக்கொண்டிருந்தான். அதுவும் சந்தோஷம் தரக்கூடியதாகவே இருந்தது. காதல்தான் எத்தனை அழகான பைத்தியக்காரத் தனம்! அவன் தனக்குள் சிரித் துக்கொண்டான். வெட்கப்பட் டான். வேகமாக வீட்டுக்குப் போனான்.

காம்பவுண்ட் கதவைத் திறக்கும்போது பிடரியில் பேயடித்தமாதிரி இருந்தது. கடவுளே! இங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது?

அவனது வீட்டு காம் பவுண்ட் வாசலில் வளர்மதி நின்றுகொண்டிருந்தாள். அம் மாவுடன்தான் பேசிக் கொண்டி ருந்தாள்.

**(தொடரும்)**

“சின்ன தாராபுரம் உதவி ஆய்வாளர் ஜான் கென்னடி, எங்க ஊருப்பக்கம் ஒரு வாரமாவே சுத்திக்கிட்டு இருந்தாரு. ஊருக்குள்ள என்னமோ ஏதோன்னு எல்லாருக்கும் நடுக்கம் வந்துடுச்சு. அப்புறம் அவரா எங்களை அணுகி, காவலர்கள் - கிராமப் பொதுமக்கள் நல்லுறவு முகாம் பத்தி எடுத்துச் சொன்னாரு. நாங்க சந்தோஷமா ஒப்புக்கிட்டோம். அதுக்கு முன்னாடி ஊருக்குள்ள ரெண்டு மூணு வகையா பிரிஞ்சு கிடந்தோம். இந்த ஒரு நாள் தத்தெடுப்புல எங்க எல்லாரையும் ஒன்



* பேபி ஃபாத்திமா * ஜனத்துல் பிர்தௌஸ்



* மாரிமுத்து

ணாக்கி வெச்சுட்டாருங்க கரூர் மாவட்ட எஸ்.பி. சாரு!” என்கிறார் விவசாயி மாரிமுத்து.

“அன்னைக்கு முச்சூடுமே எங்க ஊர்ல, ஒரே திருவிழாக் கோலம். ஒரு பக்கம் விளையாட்டுப் போட்டி, மருத்துவ முகாம்னு நிகழ்ச்சிகள் நடந்துக்கிட்டிருக்கு. இன்னொரு பக்கம் போலீஸ்காரங்களோட புதிய முயற்சி ஒண்ணு இயங்கிட்டேயிருக்கு. எங்களுக்கு எங்க போயி வேடிக்கை பார்க்கறதுன்னே புரியலை. ஏதோ ஒலிம்பிக் திருவிழா மாதிரி ஒரே ஜெகஜ்ஜோதியா இருந்துச்சு. பக்கத்து ஊரு ஜனங்க எல்லாம்கூட வேடிக்கை பார்க்க வந்துட்டாங்கன்னா பார்த்துக்கங்க!” என்கின்றனர் பெரிய மதியாக்கூடலூர் கிராமப் பொதுமக்கள்.

“என்ன படிக்கலாம், எப்படி முன்னேறலாம்னு கல்வி - வேலைவாய்ப்பு பயிற்சி முகாம் நடத்தினாங்க. இப்படிப் பல விஷயங்களைப் பாத்தப்புறம்தான், எங்க மேல எங்களுக்கே கோபம் வந்துச்சு. நாங்க ரெண்டு பேருமே எட்டாங்கிளாஸோட படிப்பை நிறுத்திட்டு டெய்லரிங் கத்துக்கப் போய்ட்டோமேன்னு வருத்தப்பட்டோம்!” என்று கூறினர், இளம் தையல் கலைஞர்களான பேபி ஃபாத்திமாவும், ஜனத்துல் பிர்தௌஸும்.

சின்ன தாராபுரம் தலைமைக் காவலர் தங்கவேல், “நான் ஜிம்னாஸ்டிக் பிளேயர்.





இந்த ஊர்ல ஏதாவது வினோதமா நடத்திக் காட்டணும்னு எங்க காவல்துறை யோசிச்சது. முப்பது அடி உயர இரும்புக் குழாய்களை தரைக்குள் ஐந்தடி பதிச்சேன். அந்தரத்தில் செய்யும் அதிசய யோகா எனும் அரிய விளையாட்டினை போலீஸ் பாய்ஸ் கிளப் வீரர்கள் மூலமா நடத்திக் காட்டினோம். ஊருசனங்க எல்லாம் அசந்து போனாங்க!” என்றார்.

“மருத்துவ சிகிச்சை முகாம்ல மட்டும் கிராம மக்கள் அறுநூறு பேர் உடல் பரிசோதனை பண்ணிக்கிட்டாங்க. சிறுவர்களுக்கான பத்து வகை விளையாட்டுப் போட்டி

# காவலர்கள் கண்டெடுத்த கோயில்!

கள் நடத்தினாங்க. பேச்சுப் போட்டி, நடனப் போட்டி, மாறுவேடப் போட்டின்னு அன்னைக்கு எங்க ஊரே காலேஜ் விழா ஆயிடுச்சு. காலைல எல்லார்க்கும் சிற்றுண்டி, மத்தியான சாப்பாடு, இரவு டிஃபன். அன்னைக்குக் காலைல எட்டு மணிக்கு வந்த எஸ்.பி.சார், நைட்டு பத்து மணிக்குத்தான் எங்க ஊரைவிட்டுக் கிளம்பிப் போனார். பொதுவா, எங்க கிராமத்து ஜனங்க இரவு எட்டு மணிக்கெல்லாம் சாப்பிட்டுட்டுத் தூங்கப் போய்டுவாங்க. ஆனா, அன்னைக்கு நைட்டு பன்னெண்டு மணி வரைக்கும் எல்லாரும் முழிச்சிருந்தாங்க. காரணம், எங்க ஊரு ஆளுங்களால கண்டு பிடிக்க முடியாம இருந்த ஒரு பழங் கோயிலை போலீஸ்காரங்க கண்டெடுத்துக் கொடுத்ததுதான்'' என்று வியப்புடன் பேசினார், ஊராட்சி மன்றத் தலைவி கஸ்தூரி சேகர்.



✱ சண்முகவேல்



✱ ஜான்கென்னடி



✱ தங்கவேல்



கரூர் மாவட்ட ஆயுதப் படையிலிருந்து நூறு காவலர்களும் சின்ன தாராபுரம் காவலர்களும் மண் வெட்டி, அரிவாள், கடப்பாரை மற்றும் ஒரு ஜேசிபி எந்திரம் சகிதம் கிராமத்தின் மேற்குப் பகுதியில் சுத்தம் செய்ய நுழைந்திருக்கின்றனர். அடர்ந்த மரங்கள், செடிகொடிகள் என அத்தனையும் அகற்றிப் பார்த்தால், அங்கே ஒரு பழங்கோயில்! உள்ளே பெரியதொரு விநாயகர்! அருகே சிறிய கல்தூணில் சின்னதாக சிவலிங்கம்.

''நாப்பது வருஷமா இது பக்கத்துல தான் குடியிருக்கேன். ஒரே முள்ளுக்காடா கெடந்திச்சு. போலீஸ் ஆளுங்க வந்துதான் இந்தக் கோயிலைக் கண்டுபிடிச்சாங்க. அன்னையிலேர்ந்து டெய்லி சாயந்தரம் வந்து புள்ளையாருக்கு விளக்கு ஏத்தி வெச்சுட்டு வர்றேன்!'' என்கிறார் அங்காத்தம்மாள்.

''**கா**வலர்கள் ஒரு கிராமத்தைத் தத்தெடுத்து, சர்வீஸ் பண்ணனும்ங்கிற 'கான்செப்ட்' ரொம்ப நாளாவே என் மனசுக்குள்ளே இருந்துச்சு. அதை முதன் முதலா பெரிய மதியாக்கூடஊர்ல செயல்படுத்திக் காட்டியிருக்கோம். அந்தப் பழங் கோயிலுக்கு, அன்னைக்கு சாயந்திரமே ஊர் மக்கள் எல்லாரும் சேர்ந்து அபிஷேக வழிபாடு நடத்தினாங்க. கோயிலைப் புதுப்பிச்சுக் கட்டி, கும்பாபிஷேகம் நடத்தவும் முடிவு பண்ணியிருக்காங்க. கோயில் திருப்பணிக்கு முதல் காணிக்கையாக, என் சொந்தப் பணத்துல பத்தாயிரம் ரூபாய் தந்திருக்கேன்!''என்று கூறினார், கரூர் மாவட்ட எஸ்.பி.சண்முகவேல்.

செய்திச் சித்திரம்: **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

## கூலா சாப்பிடுங்க!

டாக்டர் எம். ராஜேந்திரன்

# இது நொறுக்குத் தீனிகளின் காலம்!

இன்றைய டீனேஜர்களின் முக்கிய மான பொழுதுபோக்கு என்பது சாப்பிடு வதுதான்! இப்படிச் சொன்னால் சில அம்மாக்கள் கோபப்படலாம். ''தினமும் ரெண்டு வேளைதான் சாப்பிடறான். அது கூட ரொம்ப அதிகமா இல்லே'' என்பது போல் எதையாவது சொல்வார்கள்.

டைனிங் டேபிளில் தட்டில் வைத்துச் சாப்பிட்டால்தான் சாப்பாடா?

டி.வி. அல்லது கம்ப்யூட்டர் எதிரே உட்கார்ந்துகொண்டு, தொடர்ந்து நொறுக்குத் தீனிகளை உள்ளே தள்ளுவது என்னவாம்? அது வும், இனிப்பு, எண்ணெய்ப் பண்டம், சாக்லெட் போன்ற கலோரி மிக அதிகம் உள்ள தீனிகள். உடல் பருக்கக் கேட்பானேன்?

அதீத சாப்பிடும் ஆர்வம் மட்டுமே இப்படி நொறுக்குத் தீனிகளை உள்ளே தள்ளுவதற்கான காரணம் அல்ல. கண் கள் திரையைப் பார்க்க, கைபாட்டுக்கு எதிரில் பெரிய பாத்திரத்தில் உள்ள தின்பண்டங்களை அடுத்தடுத்து வாயில் போட்டுக்கொண்டிருக்கும் ஒருவித இயந் திரத்தனமும் இதில் உண்டு.

என்னிடம் தன் மகளை அழைத்து வந் திருந்தார் ஒருவர். ப்ளஸ்-டூ படித்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணின் உடல் எடை 99 கிலோ! ''ஒரு நாள் தன் தோழியின் பர்த் டே பார்ட்டிக்குக் கிளம்பிவிட்டாள். ஒரு மணி நேரம் கழித்து அவளை வீட் டுக்கு அழைத்துவர அந்தச் சிநேகிதியின் வீட்டுக்குச் சென்றிருந்தபோது, அங்கே என் மகளைப் பார்த்து பிரமிப்படைந்தேன். அவ்வளவு வேகமாகவும், அதிகமாகவும் அவள் வீட்டில் சாப்பிட்டுப் பார்த்த தில்லை'' என்றார்.

கேக் என்பது என்ன? மைதா, வெண் ணெய், டால்டா போன்றவற்றால் உரு வான தின்பண்டம். அதன் மேற்பகுதி யில் உள்ள க்ரீம் எக்கச்சக்க கலோரி கொண்டது. அதுமட்டுமல்ல விரைவி









லேயே பூசணம் (ஃபங்கஸ்) உருவாகக் கூடிய வாய்ப்பு கொண்டது கேக்.

எந்தவகை உணவுக்கு எவ்வளவு கலோரி என்பதை ஓரளவுக்காவது அறிந்து கொள்வது நல்லது. காலை வேளையில் எட்டு இட்லி என்பதே அதிகப்படி. அப்படி யிருக்க, நெய், சட்னி என்று தாராளமாக தொட்டுக்கொண்டால், கலோரி ஏன் ஏறாது?

மதிய உணவில் ஒரு கப் அரிசி சாதம் போதுமானது. நிறைய காய்கறிகளைத் தொட்டுக்கொள்ளலாம். பசி அடங்க வில்லை என்றால், மேலும் காய்கறிகள், வெங்காயம் கலந்த தயிர் பச்சடி, வெள்ளரி போன்றவற்றை எவ்வளவு வேண்டுமானா லும் சேர்த்துக்கொள்ளலாம். தக்காளி, வெங்காயம், குட மிளகாய், வெள்ளரி என்கிற கலவைதான் பீட்ஸாவுக்கே உயிர் கூட்டுகிறது. இவை இல்லாத பீட்ஸா பிரெட் வெறும் தோல்! கொஞ்சம் யோசித்தால் நாக்கும் நாம் சொன்னதைக் கேட்கும்பா!

பத்து நாட்களுக்கு ஒருமுறை எடை யைப் பாருங்கள்.

இப்படியெல்லாம் கலோரி, எடை என்பதில் கவனம் செலுத்தாவிட்டால், தீபக்குக்கு நேர்ந்தது உங்களுக்கும் நேரலாம்.



## நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 3

வகைதொகையில்லாமல் சாப்பிட்ட தால் நூறு கிலோ எடை ஏறியிருந்த தீபக்கை, சக மாணவர்கள் மிகவும் கேலி செய்தார்கள். ஆசிரியர் கேட்ட கேள்விக்கு தீபக் பதில் சொல்ல எழுந்தால்கூட வகுப் பில் சிரிப்புதான். இதனால் அவனுக்கு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டது. அவ னது நண்பர்கள் வட்டமும் சுருங்கிவிட் டது. தனிமை உணர்வு தோன்றி, அதிக மானது. மனச்சோர்வு ஏற்பட்டது. உடை விஷயத்தில் அவன் அளவுக்கு ரெடிமேட் உடை கிடைக்காது. 'டக் இன்' செய்து கொண்டாலும் அது வேடிக்கையாக இருக் கும். இவையெல்லாம் அவன் மனச் சோர்வை மேலும் அதிகமாக்கின.

தீபக்கை விளையாட்டுகளில் பங்கெடுக் கச் சொன்னேன். "கேரம் விளையாட்டா? செஸ்ஸா?" என்று கேட்டான்! வெளிப்புற விளையாட்டு என்றதும் அவன் முகத்தில் ஒரு கலவரம். "பரவாயில்லை. ஓட்டப் பந்தயங்கள் வேண்டாம். ஷாட்புட், ஜாவலின் த்ரோ என்று ஆரம்பி" என்றேன்.

விடியற்காலையில் பலரும் எழுந்திருக் காத வேளையில் மைதானத்தில் ஜாகிங் செய்யச் சொன்னேன். படிப்படியாக அவனது அதிக எடை குறைந்தது.

இந்த அவஸ்தையெல்லாம் உங் களுக்கு எதற்கு? உங்கள் விருப்பமான உணவு வகைகளைப் பற்றி மேலும் கொஞ் சம் தெரிந்துகொண்டால் நீங்களாகவே மாறிவிடுவீர்கள்.

(தொடரும்)

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**

அமீர்... 'பருத்தி வீரன்' மூலம் தமிழ் சினிமாவில் புதிய தடத்தை ஏற்படுத்திய இயக்குநர். தெளிவான சிந்தனை, பேச்சு, எழுத்துக்கு உரிமையாளராக இருக்கிறார். அவருடனான சந்திப்பிலிருந்து...



**சினிமா என்பது உங்களுக்கு என்ன?**

''சினிமா என்பது இங்கு வியாபாரம் தான். அப்படி ஆகிவிட்டது. ஆனால், அதனுள் ஒரு படைப்பாளி என்பவன், தன் கலையைப் புகுத்திவிட வேண்டும். நான் இதைத்தான் செய்கிறேன். என் எண்ணங்களை, என்னைப் பாதித்த வற்றை, நான் உணர்ந்தவற்றை வெளிப் படுத்துவதற்கு எனக்குத் தெரிந்த ஒரே வழி சினிமாதான். கலை, வியாபார உலகில் நீர்த்துப் போய்விடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறேன்.''

**பருத்தி வீரன் வெற்றி உங்களை எப்படிப் பாதித்தது?**

''ஒரு படைப்பாளியாக பருத்தி வீரனின் வெற்றி எனக்குச் சந்தோஷம் தான். ஆனால், சில காம்ப்ரமைஸ்கள் இருந்தன. குறிப்பாக, சண்டைக் காட்சி கள். என் தமிழன் இப்படிச் சண்டை போடமாட்டான். நிஜத்தில் அடிதடி என் பது வேறு மாதிரியாகத்தான் இருக்கும். ஒருவனை உதைக்க வேண்டுமென்றால் பதுங்கி நின்று அடிப்பார்கள். இல்லை வேறு மாதிரியாகத்தான் இருக்கும். யதார்த்தமான இத்தகைய படம் செய் யும்போதுகூட இந்த மாதிரி விஷயங் களில் சமரசம் செய்ய நேர்ந்து விடுகிறது. 16 வயதினிலே, உதிரிப் பூக்கள் எல்லாம் பாதித்த மாதிரி பருத்தி வீரனுக்கான இடம் கட்டாயம் இருக்கிறது. பெர்லின் பெஸ்டிவல் வரைக்கும்போய் அங் குள்ள சினிமா ரசிகர்களைக் கவர்ந் திருப்பதே பெரிய விஷயம்தானே!''

**'யோகி'யில் ஏன் அமீர்?**

'' 'யோகி'யில் ஏன் அமீர் இருக்கக் கூடாது? ஒரு நடிகர், இயக்குநர் ஆகலாம். ஒளிப்பதிவாளர், டைரக்டர் ஆகலாம். ஆனால், ஒரு டைரக்டர், நடிகராகக் கூடாதென்று ஏதாவது கட்டுப்பாடு இருக்கிறதா? யோகியைப் பார்த்துவிட்டுச் சொல்லுங்கள். இப்போது இந்தக் கேள் விக்கு நான் இவ்வளவுதான் பேச முடியும். ரிலீஸுக்குப் பிறகு முழுமையாகப் பேச கிறேன்.''

**கதை, திரைக்கதை, வசனம் என்று ஒருவரே எல்லாப் பொறுப்புகளையும் சுமப்பது தமிழ் சினிமாவில் என்று மாறும்?**

''மலையாளம், ஹிந்தி சினிமாவில் தனியே எழுத்தாளர்கள் இருக்கிறார்கள் இங்கேயும் அப்படி இருந்ததுதான். ஆனால்

# "இன்னொரு அமீரை உருவாக்குங்கள்!"

ஒரு ட்ரெண்ட் செட் ஆகிவிட்டது. அதையே எல்லோரும் அப்படியே பின்பற்ற ஆரம்பித்துவிட்டார்கள். இதை மாற்றலாம். நான் அசிஸ்டெண்டாக இருந்த சமயத்தில் பல கதைகளைக் கேட்டிருக்கிறேன். அதில் ஒரு கதை என்னை ரொம்பவும் பாதித்தது. கிராமத்தில் வேலைக்கு ஆள் எடுக்க ட்ரக்கில் வந்து கும்பல் கும்பலாக் கூட்டிப் போவார்கள். இதை மையமாக வைத்து ஒரு நாள் மட்டும் நடக்கும் சம்பவங்களைப் பதிவு செய்யும் நாட். ஆனால், அந்த எழுத்தாளர் யாரென்று தெரியவில்லை. தெரிந்தால்தானே விசாரிக்க முடியும். எங்கே என்று கல்கி மூலமாக அவரைத் தேடுகிறேன்!"

**ஆழமான காதல்தான். ஆனால் மணந்த பின் திரைத்துறையினர் பலரது வாழ்க்கை மட்டும் தோல்வியில் முடிவது ஏன்?**

"சினிமாக்காரர்கள் என்றில்லை, மனம் ஒன்றுபடாத எல்லா தம்பதியினரின் வாழ்க்கையும் இன்றைக்குத் தோல்வியில்தான் முடிகின்றன. ஆனால், சினிமா என்பது அதிகம் ஆட்கள் புழங்குகிற அதிலும் ஆண், பெண் என்ற பேதமின்றி சுதந்திரமாக உலாவ முடிகிற ஒரு துறை. ஒரு பெண், ஆணிடம் பேசாமலோ, ஓர் ஆண், பெண்ணைப் புறக்கணித்தோ பணியாற்றுவது கடினம். திருமணம் முடியும்வரை மட்டுமல்ல, முடிந்த பிறகும் சினிமாக்காரர்களை மணந்தவர்கள் இதை உணர வேண்டும். உணர்ந்தவர்கள் உலகுக்கு உண்மையாய் வாழ்கிறார்கள். உணராதவர்கள் கோர்ட் படிகளில் ஏறிக் கொண்டிருக்கிறார்கள்."

**கார்ப்பரேட் கம்பெனிகளின் வருகை தமிழ் சினிமாவை எந்த வகையில் மீட்டெடுக்கும்?**

"இவற்றால் நன்மையும் உண்டு; தீமையும் உண்டு. அண்மையில் பத்து நலிந்த தயாரிப்பாளர்களைக் கொண்டு படம் தயாரிக்க உள்ளதாக அறிவித்தது மகிழ்ச்சியாக இருந்தது. அதே நேரத்தில் புது முகங்கள், புது சிந்தனைகள் வர கார்ப்பரேட் கம்பெனிகள் வழிவகுக்க வேண்டும். நல்ல கதையை வைத்துக்கொண்டு வாய்ப்புக்காகக் காத்திருக்கும் எத்தனையோ திறமையாளர்களை அவர்கள் கண்டுகொள்ள வேண்டும். திரும்பத் திரும்ப பிரபலமானவர்களைச் சார்ந்தே இருக்க வேண்டிய அவசியம் இல்லை. எங்கேயோ ஒளிந்திருக்கும் அமீர்களையோ, வெளிச்சத்துக்கு வர முடியாத சேரன்களையோ அவர்களால் உருவாக்க முடியும்."

**ஆங்கிலப் பட டி.வி.டி. இல்லாவிட்டால் தமிழ் சினிமா அவ்வளவு தானா?**

"மிகத் தவறான கருத்து. அதே நேரத்தில் ஒரு சிலர் அப்படி இருப்பதை வேதனையோடு ஒப்புக்கொள்கிறேன்.

இன்ஸ்பிரேஷன் என்பது வேறு. ஈயடிச் சான் காப்பி என்பது வேறு. ஒரு நல்ல படத்தின் கதைக்கரு, காட்சிகள் போன்ற வற்றால் ஈர்க்கப்பட்டு, அதே போன்ற தொரு அழகியலோடு தமிழுக்கு ஏற்ற மாதிரி படம் தரலாம். இன்ஸ்பிரேஷன் இல்லாவிட்டால் யாரும் எந்தத் துறை யிலும் வந்திருக்கவே முடியாது.''

**பெண் படைப்பாளிகளால் தமிழ் சினிமாவில் எப்போதும் ஆழ்ந்ததொரு பாதிப்பை ஏற்படுத்த முடியாதது ஏன்?**

''பெண் இயக்குநர்கள் எப்போதுமே ஒரு குறிப்பிட்ட வட்டத்துக்குள் சிக்கிக் கொண்டுதான் படம் எடுக்கிறார்கள். சாஃப்ட் டான, லைட்டான சப்ஜெக்ட்தான் அவர் களது சாய்ஸாக இருக்கிறது. ஆனால், பெரும்பாலானவர்களால் இங்கு ரசிக்கப் படுவது கமர்ஷியல் சினிமாதான். அதைத் தர பெண் இயக்குனர்கள் முன் வர வேண் டும். விக்ரமை வைத்து ஆக்ஷன் சப்ஜெக்ட் இயக்கவும் தயாராக இருக்க வேண்டும். அப்போதுதான் அவர்களால் நீண்ட காலம் நீடிக்க முடியும். தரமானவர்கள் பலர் இருக் கிறார்கள். ஆண்களோடு போட்டி போட்டு அதிரடி சினிமாவையும் அவர்களால் தர முடியும். எனக்கு நம்பிக்கை இருக்கிறது.''

**இன்றைய சினிமா ரசிகனின் மன நிலை என்னவாக இருப்பதாக உணர் கிறீர்கள்?**

''அவன் தெளிவாக இருக்கிறான். எது நல்ல படமோ, அதனைக் கைதூக்கி விடத் தவறுவதில்லை. 'ஒரு தலை ராகம்' படம் ரிலீஸான போது முதல் ஒரு வாரம் மதுரை தியேட்டர்களில் கூட்டமே இல்லை. பார்த்துவிட்டுச் சென்றவர்கள் படம் பற்றிச் சொல்ல, சூடுபிடித்து, அதன் பின் ஒரு வருடம் வரை ஓடியது அந்தப் படம். இது ரசிகன் செய்த மாயம்தானே! ஆக, அவனைக் குறை சொல்பவர்கள் கடைசிவரை சொல் லிக் கொண்டுதான் இருக்க வேண்டும்.''

**தமிழ் சினிமாவின் எதிர்காலம் உங் களுக்கு நம்பிக்கை அளிக்கிறதா?**

''சர்வ நிச்சயமாக இனி தகுதி வாய்ந்த, சரக்குள்ளவர்களால் மட்டுமே தமிழ் சினிமா நிலை பெறும். வெட்டி பந்தா, கதையில்லாமல் வேறு எது எதையோ நம்பிப் படமெடுப்பவர்களெல்லாம் மெல்ல மெல்ல ஒதுங்கிவிடுவர். தமிழ் சினிமா ஒதுக்கிவிடும். டெக்னிக்கல் விஷயத்தில் இப்போதே நாம் பலருக்கு முன்னோடியாக இருக்கிறோம். உலக சினிமாக்களோடு போட்டி போடும் சினிமாவை படைக்க நம்மிடம் பல இயக் குநர்கள் இருக்கிறார்கள். அனைவரின் துணையோடு 'இந்திய சினிமா என்றால் இந்தி சினிமா' என்கிற மாயையை முறி யடித்து தமிழ் சினிமா தலை நிமிரும் நாள் வெகு தொலைவில் இல்லை!''

– மு.மாறன்



**சாஃப்ட்டான, லைட்டான சப்ஜெக்ட்தான் அவர்களது சாய்ஸாக இருக்கிறது. ஆனால் பெரும்பாலான வர்களால் இங்கு ரசிக்கப்படுவது கமர்ஷியல் சினிமாதான்.**



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2008

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!

**முதல் பரிசு - ரூ.10,000/-**
**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**
**மூன்றாம் பரிசு - ரூ.5000/-**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

விதிமுறைகள் :

★ கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது. சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

★ அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

★ படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

★ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

★ தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

★ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

★ பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

★ முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2008' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 032.**

★ கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 16.

★ போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.

படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

- ஆசிரியர்

ச.ந.கண்ணன்

கிரிக்கெட் இன்றைக்குத் திரை உலக பாணியில் இயங்கிவருகிறது. விளையாட்டு வீரர் என்கிற அளவுகோலைத் தாண்டி, கிரிக்கெட் வீரர்கள் ஆராதிக்கப்படுகிறார்கள். தீம் பாடல்கள் புகைமண்டலத்தின் பின்னணியில் உருவாக்கப்படுகின்றன. ரஜினிக்கும் சிரஞ்சீவிக்கும் வழங்கப்பட்டதுபோல டோனிக்குப் பெரிய சம்பளம் நிர்ணயிக்கப்படுகிறது.



முதல்முறையாக தேசம், தாய்நாடு என்கிற புல்லரிப்புகள் இன்றி கிரிக்கெட்டை ரசிக்கவேண்டிய புதிய நடைமுறைக்குத் தள்ளப்பட்டுள்ளார்கள் ரசிகர்கள். எந்த பேதமும் இன்றி கிரிக்கெட்டை ரசிக்க இது வழிவகுக்கும் என்றாலும், இப்போது பிராந்திய உணர்வுகள் தலைதூக்கிவிட்டன. தமிழ்நாட்டுக்கும் கர்நாடகாவுக்கும் இடையே உள்ள ஜென்மப்பகை கிரிக்கெட்டிலும் எதிரொலிக்கிறது. இப்போதே இணையதளங்களில் சென்னை ரசிகர்கள், சென்னை சூப்பர் கிங்ஸ் அணித்தலைவரான டோனிக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள் - 'எக்காரணம் கொண்டும் பெங்களூரு அணியிடம் மட்டும் தோற்றுவிடாதே!' ஆர்குட் இணைய தளத்தில் இது பற்றி காரசாரமாக விவாதங்கள் நடக்கின்றன. (சென்னையில் நடக்கும் ஒவ்வொரு மேட்சிலும் டிக்கெட் விற்பனையில் மட்டும் மூன்றரை கோடி வசூலாகும்).



சென்னை சூப்பர் கிங்ஸ் அணிக்கு ஏர்செல், எஸ்.குமார்ஸ், ரீபோக், கேஃப் காஃபி டே ஆகிய நிறுவனங்கள் பணத்தை வாரியிறைக்கின்றன. சென்னை அணிமீது எல்லோருடைய கவனமும் அழுத்தமாகப் பதியக் காரணம், அதன் தலைவர் டோனி.




உலகிலேயே அதிக விலைக்கு விற்கப்பட்ட கிரிக்கெட் வீரர். ஆறு கோடி தமிழர்களின் சார்பாக அவர் தலைக்கு ஆறு கோடி ரூபாய் பேசப்பட்டது. எல்லோரும் ஒப்புக்கொள்ளும் ஒரு விஷயம் - ஹைதராபாத் அணியின் அதீத பலம். சென்னை அணியின் ஊக்கத்துக்காக விஜயும் நயன்தாராவும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். கூடுதல் ஊக்கத்துக்கு டிரம்ஸ் சிவமணியை வரவழைத்திருக்கிறார்கள். மேட்ச் நடக்கும் நாட்களில் சிவமணியை டிரம்ஸ் சகிதம் மைதானத்தில் காணலாம்.

வெளிநாட்டு வீரர்கள் எல்லா ஆட்டங்களுக்கும் தயாராக இருக்கப் போவதில்லை. மே 1 முதல் ஆஸ்திரேலிய வீரர்கள் மே.இந்திய தீவுக்கு பறந்துவிடுவார்கள். முதல் பத்து நாட்களுக்கு தெ.ஆ. வீரர்கள் ஐ.பி.எல். ஆட்டங்களில் கலந்துகொள்ளப் போவதில்லை. இதில் பலமாக அடிபடப்போவது சென்னை அணிதான். ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஹேடனும் ஹஸ்ஸியும் முதல் இருவாரங்கள் ஆடிமுடித்துக் கிளம்பும்





போதுதான் தெ.ஆ. அணியைச் சேர்ந்த மார்க்கல்லும் எண்டியும் சென்னை மீனம்பாக்கத்தில் வந்து இறங்குவார்கள். ஓர் அணியில் நான்கு வெளிநாட்டு வீரர்கள் மட்டும்தான் பங்குபெற முடியும் என்பதால், இது பெரிய தலை வலியாக இருக்காது. ஆனால், சென்னை அணியின் 14 ஆட்டங்களிலும்

# தோனி!

## ...ார்க்கும் கிரிக்கெட்

ஸ்டீபன் ஃப்ளமிங்கும் முத்தையா முரளி தரனும் ஆடுவார்கள். எல்.பாலாஜி நீண்ட ஒய்வுக்குப் பிறகு சென்னை அணிக்காக ஆடவிருக்கிறார்.

ஐ.பி.எல். அணியில் ஆடும் இந்திய வீரர்கள் டெஸ்ட் மேட்ச்சைத் தவறவிட்டு விட்டோமே என்று தேம்புகிறார்கள். சிக்ஸர்களும் ஃபோர்களும்தான் 20-20 ஆட்டங்களின் இலக்கு என்பதால், மசாலாபட ஹீரோ போல கிரிக்கெட் வீரர்கள் பொழுதுபோக்குக் கருவிகளாகி விட்டார்கள். 20-20 போட்டியின் முக்கிய மான விசேஷ குணம், கடைசி இரண்டு ஓவர்களில்தான் அணிகளின் வெற்றி, தோல்வி எழுதப்படுகிறது. பொதுவாக ஒன்பதரைக்கே விளக்கணைத்துப் படுக்கப் போகும் சென்னைவாசிகளுக்கு தொடர் சிவராத்திரிதான்!

# போன்சாய்



பூட்டிக் கிடந்த வீட்டையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள் தமயந்தி. நேரம் இரவு பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. கணவன் சேகரும் குழந்தை திவ்யாவும் ஆழ்ந்த உறக்கத்திலிருக்க, எழுந்து சென்று மேட் போட்டுவிட்டு வந்தாள். மறுபடியும் எதிர்வீடு தரிசனம். இரண்டு மாதங்கள்தான் ஆகின்றன வசந்தி எதிர் வீட்டுக்குக் குடி வந்து. ஆறு வயதிலும் எட்டு வயதிலும் இரண்டு பெண் பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு, வசந்தி குடி வந்த தினம் இன்னமும் தமயந்தியின் கண்ணுக்குள் நிற்கிறது.

சின்ன டெம்ப்போவில் வந்திறங்கிய சாமான்களை, மூவருமாகச் சுமந்து சென்று உள்ளே வைத்துக்கொண்டிருக்க, காலையில் வாசல் பெருக்க வந்த தமயந்தி நிமிர்ந்து பார்த்தாள். இவளுக்குப் பக்கத்திலிருந்த டிசம்பர் பூ செடியையே, அதில் பூத்துக் குலுங்கிய மலர்களையே கவனிப்பதும் நடப்பதுமாக இருந்த சின்னவளை வசந்தி அதட்டினாள்.

''அங்க என்னடி பார்வ...? வேலையைக் கவனி.''

தமயந்தி, குனிந்து பெருக்க ஆரம்பித்தாள். ஏனோ சட்டென்று வசந்தியைப் பிடிக்காமல் போனது. சிலர் இப்படித்தான் நெருங்கும் முன்னரே விலகிவிடுவார்கள். தமயந்தி, படியேறி மேலே வந்துவிட்டாள். சேகர், ஊருக்குக் கிளம்புகிற அவசரத்தில் அன்னைக்கு டிசம்பர் பூவைக்கூட அவன் திரும்பிப் பார்க்கவில்லை. வாடி நின்றவை வசந்தியின் மகளை ஈர்த்ததில் வியப்பில்லை; பறிக்க வந்துவிட்டாள். இதனை திவ்யா குட்டி பார்த்து, 'அம்மா, பூவ ஒரு அக்கா பறிச்சிச்க' என்று தமயந்திடம் சொல்லிவிட, துணுக்குற்று எட்டிப் பார்த்தவளின் முகம் சிவந்துவிட்டது. தன் வீட்டுப் பூ (வாடகை வீட்டைத் தன் வீடாகவே பாவிப்பது சென்னையில் வழக்கம்தானே! அதுவே பல சிக்கல்களுக்கு வழியமைத்துவிடுவது தனிக்கதை) இன்னொருத்தி கையிலா? விரட்ட காலடி எடுத்து வைத்தவள், நின்றுவிட்டாள். பூவுக்காக

# மனசு!





**மு. மாறன்**

இப்படிச் சண்டை போட்டது தெரிந்தால், தெருவாசிகள் மத்தியில் தனது இமேஜ் கெட்டு விடுமோ என்று யோசித்து, அந்தச் சின்னப் பெண்ணை விரட்டும் எண்ணத்தைக் கைவிட்டாள்.

வசந்தி, டிசம்பர் பூவை வைத்துக் கொண்டு கடை கண்ணிகளுக்குச் சென்றதைப் பார்த்த தமயந்திக்கு எரிந்தது. அன்று அவளும் திவ்யாவும் மல்லிகைதான் சூடினர். வேலை முடிந்ததும் வந்து நின்று வீட்டுக்கார அம்மாளிடம் கதை பேசிக் கொண்டிருந்தபோது டிசம்பர் பூ பற்றி ஆரம்பித்தாள்.

''எதுத்தாப்புல குடி வந்திருக்கே ஒரு பொம்பள... ரெண்டு பொண்ணு போல... மூஞ்சே சரியில்ல'' அதற்குள் வீட்டுக்காரி வசந்தி பற்றிப் புட்டுப்புட்டு வைத்தாள்.

''அவளா, புருஷன் இல்லியாம். எவ கூடவோ ஓடிட்டானாம். இவதான் ரெண்டு பொட்டப்புள்ளைகளைக் காப்பாத்துறாளாம். எங்கியோ ஒரு கம்பெனில வேலை பாக்குறாளாம். பாக்க பாவமா இருந்துச்சுன்னு வீடுவிட்ட சரசு சொன்னா. அட்வான்ஸ் பதினஞ்சுல இன்னும் பாக்கி மூணு நிக்குதாம். புள்ளைங்க படிக்குதுங்க போல...''

புருஷன் இல்லை என்றதும் தமயந்திக்கு வியர்த்து விட்டது.

''சின்ன வயசா இருக்கா; கஷ்டம்தான்'' என்றாள். வருந்திச் சொன்னது மாதிரியே இல்லை.

அதன் பிறகு ஒவ்வொரு நாளும், கண் கொத்திப் பாம்பாக டிசம்பர் பூக்களைப் பாதுகாத்துப் பறித்தாள் தமயந்தி. அசந்து என்றைக்காவது தூங்கிவிடும் பட்சத்தில், பூக்களை வசந்தி மகள் பறித்து கூந்தலேற்றி விடுவாள். தமயந்திக்கு அன்று முழுவதும் மூட் அவுட் ஆகிவிடும். 'எங்கிருந்து வந்ததடா இந்தப் பேய்கள்' என்று நினைத்துக்கொள்வாள். ஒருமுறை வசந்தி, எதிர்வீட்டுக்காரியாச்சே என்று பேச வந்தபோது, இதனாலேயே தமயந்தி முகத்தைத் திருப்பிச் சென்றுவிட்டாள். வசந்திக்கு

என்னவோ போல் ஆகிவிட்டது. வீட்டுக்காரம்மாளிடம் மட்டும் பேசியவள், சமயங்களில் திவ்யா குட்டியைத் தூக்கிக் கொஞ்சினாள். இறக்கி விடப்பட்டு, குழந்தை தமயந்தியைத் தஞ்சமடையும் நேரத்தில் கண்டிப்பாக அவளிடம் அடிவாங்கி அழும். காரணமே புரியாத நிலையில் வசந்தி அவளைப் பார்ப்பதையே குறைத்துக்கொண்டாள்.

திடீரென்று ஒரு நாள் தமயந்திக்கு சந்தோஷம் பற்றிக்கொண்டது. அது டிசம்பர் பூக்கள் வசந்தி மகளின் கூந்தலேறிய ஒரு தினம். ஓடோடி வந்து தனது வீட்டுக்காரம்மாவிடம் பொரிந்தாள்.

''உங்களுக்கு விஷயம் தெரியுமா? எதிர்வீட்டு வசந்தி, கம்பெனில எங்கயும் வேலை செய்யல. அது சினிமாக்காரி. நான் இப்பத்தான் அவள 'நெறைஞ்ச மனசு' சீரியல்ல பார்த்தேன். வேலைக்காரி வேஷத் துல வந்தா. சரசம்மாகிட்ட பொய் சொல்லி வீடு குடி வந்திருக்கா''

''அப்படியா சொல்ற! சினிமாக்காரின்னா சரகக்கு ஆகாதே. மொதல்ல விஷயத்தை அவகிட்ட சொல்லணும். அப்புறம் தெரிஞ்சே சொல்லலையேன்னு நம்மகிட்ட கோச்சுப்பா.''

சொல்லிவிட்டாள். தமயந்தி எதிர்பார்த்தது அன்று சாயந்தரமே நடந்தது. சரசம்மா, வீட்டுக்குள் நுழைய முயன்ற வசந்தியை வாசலிலேயே நிற்க வைத்து எகிறினாள்.

''ஏம்மா, உண்மைல நீ எங்கதான் வேலை செய்ற? புருஷன் செத்துட்டான்னு சொன்ன, யாரோ ஒருத்தன் உன் வீட்டுக்கு அடிக்கடி வந்துட்டுப் போறானே, யாரு?''

சவுக்கால் அடித்ததுபோல் துடித்தாள் வசந்தி. சுற்றும் முற்றும் திரும்பிப் பார்த்தாள்.

அவன் பார்வையில் தமயந்தி கவனித்துக்கொண்டிருப்பது தெரியவில்லை.

''ஏம்மா ரோட்ல வைச்சு கத்தறீங்க? அவரு எங்க சொந்தக்காரரு. எனக்கு ஒத்தாசையா இருக்காரு.''

''நீ சினிமாக்காரியா?'' சினிமாக்காரர்களுக்கு வீடு விடாத சமூகத்தில், வேஷம் கலைந்தவுடன் வசந்தி விக்கித்துப் போய் விட்டாள்.

''இல்லம்...மா... நான் கம்பெனிலதான் வேலை செய்றேன்.''

''பொய் சொல்லாதம்மா. இதெல்லாம் சரிப்பட்டு வராது. பத்து நாள் டைம் தரேன். வீட்டைக் காலி பண்ற வழியப் பாரு.''

இரண்டு பெண் குழந்தைகளும் வந்து இடுப்பைக் கட்டிக்கொள்ள, மனமுடைந்துபோய் கதவைச் சாத்திக் கொண்டாள் வசந்தி. தமயந்திக்கு முதல் முறையாக இலேசாக உள்ளுக்குள் ஈரம்

“கவிஞர் புலமைப்பித்தன், முத்துலிங்கம், பாடகர்கள் எஸ்.என். சுரேந்தர், சீர்காழி சிவசிதம்பரம் நால்வரும் தான் என் சாய்ஸ்'' என்கிறார் இயக்குநர் பி.சி. அன்பழகன், பாட்டெழுதவும் பாடுவதற்கும் அல்ல... நடிப்பதற்கு!

'அய்யா வழி' என்னும் வரலாற்று



சினிமாவை எடுத்து வரும் அன்பழகன், ஏற்கெனவே 'காமராசு' படம் மூலம் தமிழ் சினிமாவின் கவித்துவ இயக்குநர் என்று அடையாளப்படுத்தப்பட்டவர்.

கொடுங்கோல் மன்னன், புலவர், அமைச்சர்கள் என இவர்கள் நடித்தபோது சுற்றிலும் நின்று பார்த்த ஜனங்களுக்கு நிஜ மன்னராட்சியையே கண்ட திருப்தி. செஞ்சி கோட்டை யில் அரண்மனை அரங்குகள் அமைத்து 20 நாட்கள் படப்பிடிப்பு நடத்தினோம். அந்த ஊர் மக்கள் திருவிழா மாதிரி வந்து கலந்துகொண்டு, ஷூட்டிங்கிலும் பங்கேற்றது புதுமையானதாக இருந்தது'' என்கிறார் அன்பழகன்.

**– சுப்பு**

கசிந்தது அன்றுதான்.

**அ**டுத்த நாள் காலை, வசந்தியின் பிள்ளையே பறித்துக் கொள்ளட்டும் என்று டிசம்பர் பூக்களைப் பறிக்காமலே விட்டாள் தமயந்தி. அவள் எதிர்பார்த்தது போல் அந்தப் பெண் பறிக்க வர, வீட்டுக்காரம்மாள் வெளியில் வந்து, ''தோ பாரும்மா, எங்க வீட்ல குடித்தனம் இருக்கறவங்களுக்குப் பூ வேணும். இங்கல்லாம் பறிக்க வராதே'' என்றுவிட்டாள். குழந்தை அப்படியே விட்டுவிட்டுச் சென்றுவிட்டது. பார்த்துக் கொண்டிருந்த தமயந்திக்கு என்னவோ போல் ஆகிவிட்டது. அன்றைக்கு ராத்திரி துணி எடுக்க மொட்டை மாடிக்கு வந்தவளுக்கு, எதிர்வீட்டு மாடியில் இருண்ட மறைவுப் பிரதேசத்தில் யாரோ உட்கார்ந்திருப்பது தெரிய, உற்றுப் பார்த்தாள். வசந்தி, தன் குழந்தைகளுடன் சோகமாக உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தாள். அன்று முதல் டிசம்பர் பூக்களை தமயந்தி பறிப்பதே இல்லை. தானே வாடி உதிர்ந்து கொண்டிருந்தன.

**இ**ன்றைக்கு வசந்தி வீடு காலி செய்யப் போவதாய் வீட்டுக்காரம்மாள் தமயந்தியிடம் கூறியிருந்தாள். கொஞ்ச நாட்களாக வசந்தியையும் அந்தப் பிள்ளைகளையும் பார்க்கவே வெட்கப்பட்டாள் தமயந்தி. தன்னால்தான் இப்படியாகிவிட்டது என்ற குற்ற உணர்ச்சி அவளைக் குதறித் தீர்த்துக்கொண்டிருந்தது. புறப்படும் நேரத்திலாவது ஒரு புன்னகையை வழங்கலாம் என்று தான் கதவு திறக்குமாவெனக் காத்திருந்தாள். ம்ஹூம்.. பூட்டுதான் எப்போதும் அவளை முறைத்துக்கொண்டிருந்தது. எல்லோரும் எங்கே போனார்கள் என்று தெரியவில்லை. 'அன்றைக்கு அழுதாளே... குடும்பத்தோடு சேர்ந்து தவறான முடிவேதும் எடுத்து விட்டாளோ' என்று விபரீதமாகக்கூட யோசித்தாள். ஒரு கட்டத்துக்கு மேல் தூக்கம் தமயந்தியைத் தழுவ ஆரம்பிக்க, போரிட்டு அவளால் ஜெயிக்க முடியவில்லை. உறங்கி விட்டாள்.

**கா**லை நான்கு மணிக்கெல்லாம் விழிப்பு வந்துவிட்டது. காரணம், வெளியில் கேட்ட ஏதோ சத்தம். எழுந்து பாத்ரூம் போய்விட்டு வந்து எட்டிப் பார்த்தாள். வசந்தி வீட்டு முன்பு ஒரு டெம்ப்போ நின்றுகொண்டிருக்க, உள்ளே பாத்திரம் பண்டங்களை வசந்தியும் குழந்தைகளும் எடுத்து வைத்துக்கொண்டிருந்தார்கள். வண்டி டிரைவர் தூரமாய் நின்று தம்மடித்துக்கொண்டிருந்தான். ஒரு நிமிடம் யோசித்த தமயந்தி விறுவிறுவென மாடியிலிருந்து கீழே இறங்கினாள். அதிகாலையில் பூத்தும் பூக்காமல் குலுங்கிக்கொண்டிருந்த டிசம்பர் பூக்களைச் செடியிலிருந்து பறித்து இருகைகளிலும் ஏந்திக்கொண்டு மேலே வந்தாள். அதற்குள் அங்கே எல்லா சாமான்களையும் ஏற்றிவிட்டிருந்தார்கள். ஹாரன் சத்தம் கேட்க, எட்டிப் பார்த்த தமயந்தி பரபரப்பானாள். அவசர அவசரமாய் தான் சரமாய்த் தொடுத்திருந்த டிசம்பர் பூவை எடுத்துக்கொண்டு படிகளில் விறு விறுவென இறங்க ஆரம்பித்தாள்.

# பூவுக்குள்

**புஷ்பவனம் குப்புசாமி**
**-அனிதா குப்புசாமி**

கொல்லையில
கொய்யா மரம்
கொண்டையில
தாழம் பூவு
தாழம்பூவு வாசத்துல
தான் மயங்கி மோகத்துல
சோவப் பொரி மத்தியில
சுட்டு வச்ச தோச போல
நெல விருக்கிற நேரத்துல
நான் வருவேன் சாமத்துல

- இது நான் சேகரித்த மக்களிசைப் பாடல்களுள் காதல் மணக்கும் கவிதை. தமிழ் செவ்விலக்கியங்களைப் புரட்டிப் பார்த்தால், சங்கத் தமிழரின் காதல் சிறப்புகள் தெரிய வரும். ஆண்-பெண் காதல் உணர்வுகளை நெறிப் படுத்தி, அகப் பொருள் எனத் தொகுத்துத் தந்த தொன்மை யான பெருமை தமிழனுடை யது. அந்தச் சங்கத் தமிழுக்கு நிகரானது மக்களிசைப் பாடல் கள். காதல், வீரம், ஈகை, என சகலவிதமான உணர்வுகளை யும் ஒன்று திரட்டி வைத்திருக் கும் உன்னதம்தான் மக்களி சைப் பாடல்கள். அதுவும் மக்களிசையில் காதல் பாடல் களை எடுத்துக் கொண்டால், எந்தப் புலவனும் தொட முடியாத உச்சத்தை அது தொட்டிருக்கும். காதலனைக் காதலி வர்ணித்தாலும், காதலி யைக் காதலன் வர்ணித்தாலும் தனித்துவம் தெறிக்கும்; மகத் துவம் மணக்கும்

ஒத்தையடிப் பாதையிலே
ஓடக்கரை ஓரத்திலே

# ...நகம்பம்!



*சுத்திவிட்ட பம்பரம் போல*
*சுத்தரமாய்ப் போறவனே*
*அந்தமவ ரத்தினமே ராசாத்தி - என்*
*ஆசையுள்ள சித்திரமே*
*நில்லாத்தி!*

என உலகக் காதல் அத்தனையும், ஒத்தப் பாட்டில் சொல்லிவிடும் திணவு மக்களிசைப் பாடலுக்கு உண்டு. அந்த மக்களிசைப் பாடல்கள்தான் என்னையும் அனிதாவையும் சென்னை இசைக் கல்லூரிக்குக் கொண்டு வந்து சேர்த்தன.

நான் இசையில் முனைவர் பட்டத்துக் கான முனைப்பில் இருந்தபோதுதான், இசையில் முதுகலை படிப்புப் பயில்வதற்காக, அனிதா சென்னை இசைக் கல்லூரியில் சேர்ந்தார். ஏற்கெனவே இசைக் கச்சேரிகளுக்குச் சென்று பாடி வந்தபோது அனிதா எனக்கு கொஞ்சம் அறிமுகமாகியிருந்தார். கல்லூரிகளுக்கிடையே நடக்கும் 'யுனிபர்ஸ்ட்' விழா எங்களுக்குள் மெல்லிய நட்பை உருவாக்கித் தந்தது. இருவரும் இணைந்து அந்த விழா மேடைகளில் பாடி வந்தோம்.

ஆரம்பப் பாட்டுல வர்ற நெலவு போலத்தான் அனிதா இருந்தாங்க. வியாபாரப் பின்னணியிலேருந்து வந்த பொண்ணு. வசதியான குடும்பம் வேற. டைம் பாஸ்க்காகத்தான் இசை பயில வந்திருப்பாங்கன்னு நினைச்சேன். ஆனால், அவங்க ஆர்வம் எனக்குப் புலப்பட ஆரம்பிச்ச பிறகுதான் என் முழுப் பார்வையும் அனிதா பக்கம் திரும்ப ஆரம்பிச்சது. ஆனால், ஆரம்பத்துல அதுல காதல் இல்லை. நம்ம பாட்டுக்குக் கைதட்ட ஒரு குயில் கிடைச்சிருக்கே என்ற சந்தோஷம் தான் எனக்கு இருந்தது. பாட்டுக்காக மட்டுமே சந்தித்தோம். நான் சொல்லிக் கொடுத்த பாடல்களை அனிதா அவ்வப் போது மேடைகள்ல பாடி வந்தாங்க.

சென்னை 'நாரத கான சபா'வுல ஒரு நிகழ்ச்சி. 'மக்களிசையிலிருந்து கர்நாடக இசைக்கு' என்ற சிறப்பு நிகழ்ச்சி அது. காரைக்குடி கே.எஸ்.சுப்ரமணியம்தான் அந்த நிகழ்ச்சியை நடத்தினார். நானும் அனிதாவும் அதுல பாடப் போனோம். வாத்தியக் கருவிகள் வாசித்தவர்களெல்லாம் மிகப் பெரிய ஜாம்பவான்கள்.

செம்மங்குடி சீனிவாச அய்யர் தலைமை. உமையாள்புரம் சிவராமன் மிருதங்கம், பி.வி.சுப்ரமணியம் வயலின், வி.டி.எச்.விநாயகராம் கடம், புல்லாங்குழல் ரமணி, அந்த நிகழ்ச்சியில திரைப்பட பின்னணி பாடகி அனுராதா ஸ்ரீராமும் பாடினார்.

*'காப்புக்கடை ஓரத்திலே! - புள்ளே*
*காப்பு வாங்குற அம்மாக்*
*கண்ணு*
*காப்பு வாங்கித் தாரேன்*
*புள்ளே - நீ*
*வாலாட்டாம்தான் வீட்ட*
*வாயேன்*
*இன்பமுள்ள அம்மாக்கண்ணு - உன்ன*
*எங்ககண்டு தேடுவேனோ?*

*நேத்து சொன்ன சங்கதிய! - மச்சான*
*பாத்து சொல்ல வந்ததென்ன*
*ஆத்துப்பக்கம் காத்து வீசும் - மச்சான்*
*அங்க போயி நின்னு சொல்லு!*
*ஆள மயக்குற அய்யாக்கண்ணு - உன்*
*ஆச வார்த்தய நம்புவேனோ?*

பெரிய ஜாம்பவான்கள் மத்தியில பாடுறோமேன்னு ஒரு நடுக்கம் இருந்துச்சு. ஆனால், அவங்க கொடுத்த ஆசிர்வாதத்தை எங்களால் மறக்க முடியாது. செம்மங்குடி அய்யர் எங்களை ரொம்ப ஊக்கப்படுத்திப் பேசினார். அதுக்கப்புறமா நானும், அனி



தாவும் சேர்ந்து பல கச்சேரிகள் பண்ண ஆரம்பிச்சோம். எங்க கச்சேரிக்குன்னு தனிக்கூட்டம் சேர ஆரம்பிச்சது. குறிப்பா பெண்கள் மத்தியில மிகப் பெரிய வரவேற்பு இருந்தது. மக்களிசைப் பாடல்களைத் தரக்குறைவா நினைக்கிற வழக்கத்தை மாத்தணும்னு எனக்குள்ள சபதம் எடுத்தேன். அதற்காக இன்னும் இன்னும் உழைக்க ஆரம்பித்தேன். என் ஆர்வத்தை மக்களிசையின் சகல திசைகளிலும் செலுத்தினேன். அழுத்த அழுத்த கரியும் வைரமாக மாறுவது போல எங்களுக்குள் இருந்த சபதமும் நிறைவேறத் தொடங்கியது. கச்சேரிகளில் அதற்கான முயற்சியை மேற்கொண்டேன். அப்படிப் பண்ணுன கச்சேரியில் எங்கள் படங்களை முதன் முதலில் அட்டையில் போட்டு கௌரவப் படுத்தியது 'கல்கி'தான்!

அதுக்குப் பிறகுதான் என் மனசு மெல்லமெல்ல அனிதா பக்கம் சாய ஆரம்பிச்சது. இசைக்குப் போட்டியா அனிதாவோட நினைவுகள் எனக்குள் ரீங்காரமிட ஆரம்பித்தன. எனக்குள் காதல் உணர்வுகள் முளைக்க ஆரம்பித்த பிறகு கச்சேரி முழுக்க காதல் பாடல்கள்தான் களை கட்டியது.

*மருத மரிக்கொழுந்தே!*<br>
*மணலூரு*<br>
*தாழம்பூவே*<br>
*சேத்தூரு செவ்வந்தி*<br>
*பூவே! - என்*<br>
*தங்கமே தங்கம்*<br>
*நாம சேருறது எந்தக்*<br>
*காலம்!*

இப்படி ஏகப்பட்ட பாடல்கள்.

கிராமத்துல ஒரு பழமொழி சொல்வாங்க. அற்பனுக்கு வாழ்வு வந்தா அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்னு அப்படித்தான், அனிதாவின் நினைவுகளுக்கு அல்லும் பகலும் என் மனசு குடை பிடிக்க ஆம்பிச்சது.

கிராமத்து இளைஞனுக்குக் காதல் கிறுக்குப் புடிக்க ஆரம்பிச்சதுனா அவ்வளவு மனசு படுற பாட்டைச் சொல்லி மாளாது. கண்ணாடி முன்னாடியே தவம் கிடைப்பான். சீவி சீவியே சீப்புக்குப் பல்லு உடைஞ்சுடும். எல்லாத்துக்கும் மேல அழுக்கில்லாமல் சட்டைத் துணிப் போடத் தோணும். இந்த எல்லா அவஸ்தைகளும் எனக்குள் அலையடிக்க ஆரம்பித்தன.

*ஆசைக் கிளியே செண்பகமே!*<br>
*ஆசையெல்லாம் உன் வசமே*<br>
*வாசம் பூ வாசம் - அது*<br>
*வீசும் தை மாசம்*<br>
*நேசம் என் நேசம் - இது*

*நேசமா வந்த தேசம்!*

இப்படியெல்லாம் எவக்குள்ள புலம்பிக்கிட்டே அனிதாவுக்கான காதலை நான் வளர்க்கத் தொடங்கினேன். எத்தனை நாளைக்குத்தான் நெல்லுக்கதிரை தின்ன வெள்ளாடு மாதிரி செருமிக்கிட்டே இருக்கிறது. காதலைச் சட்டுப் புட்டுனு சொல்லணும் இல்லையா. அந்த அவஸ்தையிலேயே முழி பிதுங்க ஆரம்பிச்சிடும்.

*கேவம்மா என்ராணி! கிட்டே*
*நீ வா நீ*
*ஆசையா நான் பேச வேணும்னு*

என் காதலை அனிதாவிடம் சொல்லப் போனேன். அப்ப பூவுக்குள்ள விழுந்த இடி மாதிரி வெடிச்சதையா ஒரு பூகம்பம்.

**(அடுத்த வாரம் அனிதா குப்புசாமி)**

படங்கள் : ஸ்ரீஹரி

*"ஒட்டப் பந்தயத்துல நீங்க பல பதக்கங்கள் வாங்கியிருக்கீங்க... அதுக்கு அடிப்படை காரணம் என்ன..?"*

*"உண்மையைச் சொல்லணும்னா ஊர் முழுக்க நான் கடன் வாங்கியிருந்தது தான் காரணம்!"*

*- சீர்காழி வி.ரேவதி*



# நீங்கள் கேட்டவை
# தராசு



* தாமரையோட்டுத் தாக்குதல்!

மாவோக்கள் வெற்றி பெற்றுள்ளது இந்தியாவுக்குப் பல விதங்களிலும் எச்சரிக்கை.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? இரண்டு ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி, இலவச கலர் டீ.வி. என்று கர்நாடக காங்கிரஸ், தி.மு.க.வின் தேர்தல் வாக்குறுதிகளையே காப்பியடித்துள்ளதே?

! இதனால் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியாது. எனவே, தேர்தலில் வெற்றி பெற்றுவிடவும் முடியாது என்பதை கர்நாடக மக்கள் உணர்த்தினால், அது தமிழகத்து மக்களுக்கும் தி.மு.க.வுக்கும்கூட நல்ல பாடமாக அமையும்.

# தி.மு.க.வை காப்பியடிக்குதே

● காயத்ரி நவீன், பெங்களூரு - 47

? நேபாளத்தில் மன்னராட்சி முடிவுக்கு வந்துள்ளதே?

! மாவோ தீவிரவாதிகள், ஆயுதப் போராட்டத்தைக் கைவிட்டு ஜனநாயகத்துக்கு வந்திருப்பது இங்கேயுள்ள மாவோ போராளிகளுக்கு நல்ல சமிக்ஞை - சீதாராம் யெச்சூரி சுட்டிக் காட்டியுள்ளது போல. அதே சமயம், நேபாள அரசியல் நிர்ணய சபைக்கு

● எஸ்.குமாரசாமி, சேலம்

? பல்வேறு மத நம்பிக்கைகள் உள்ள மக்கள் வாழும் நாட்டில் எல்லோருக்கும் பொதுவான அரசியல் தலைவர்கள், தங்கள் மதவழிபாடுகளைப் பகிரங்கமாக வெளிப்படுத்துவது சரியா? (உதாரணம்: சரத்குமார் தங்கத்தேர் இழுத்தது)

! நாத்திகர்கள் உள்பட பல்வேறு தலைவர்களும் தனிப்பட்ட மத நம்பிக்கைகள் உள்ளவர்கள்தானே. அவர்களுக்கும் அந்த உரிமை உண்டு. பிறர் மனம் புண்படாமலும் இடைஞ்சல் ஏற்படாமலும் பார்த்துக்கொள்வதுதான் முக்கியம்.



* நம்பிக்கைத் தேர்



* அடங்காத அதிக்கை!

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

? 'ரஜினியை கர்நாடகாவில் நுழைய விடமாட்டோம்' என்கிறாரே வட்டாள் நாகராஜ்?

! ரஜினி அவ்வளவு ஆவேசமாகப்

பேசியிருக்க வேண்டாம் என்பது உண்மையாயினும் அது வட்டாள் நாகராஜின் குண்டாந்தடி பிரயோகங்களை ஒப்பு நோக்க, தாமரை மொட்டுத் தாக்குதல்.

● பழ கவிதா சிவமணி, புன்செய்ப் புளியம்பட்டி

? 'சுதந்திர இந்தியாவில் ஒவ்வொரு தேர்தலும் மக்களை ஜாதி, மதம், பிராந்தியம் என்று பிரித்தது' என ஃபரூக் அப்துல்லா கூறியது பற்றி..?

! ரொம்ப சரி; தேர்தலின்போது மட்டும் அல்ல; தேர்தல்களுக்கிடையேயும் அவற்றுக்கு முன்னும் பின்னும் இந்தப் பிரித்தாளும் சூழ்ச்சி ஆற்றொழுக்காகத் தொடர்கிறது.



# காங்கிரஸ்?

* அறியாமைப் பிரகடனம்!

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

? 'ராகுல் காந்தியை அமைச்சராக்க விரும்பினேன்; ஆனால், அவர் மறுத்து விட்டார்' என்று சோனியா பகிரங்கமாக வெளியிடுவதன் நோக்கம் என்ன?

! பையன் உத்தமபுத்திரன் என்று காட்டுவதாக இருக்கலாம். ஆனால், பிரதமருக்கு மட்டுமே உள்ள அமைச்சர் பொறுப்பு வழங்கும் உரிமையைத் தமதாக்கிக் கொண்டதுடன் அதனைப் பிரகடனமும் படுத்தியிருப்பதன் மூலம், சோனியா காந்தி தமது அறியாமையை மட்டுமின்றி காங்கிரஸின் பரிதாபகரமான நிலைமையையும் வெளிப்படுத்தி யிருக்கிறார்.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி

? 'இட ஒதுக்கீடு சட்டத்தில் கிரீமி லேயர் எனும் கிருமியை நீக்க வேண்டும்' என்று தமிழக முதல்வர் கூறியுள்ளாரே?

! ஏழைகளுக்கு அநீதி செய்யும் எதிர்ப்பு இது. பேசாமல் இதைக் கைவிட்டுவிட்டு உச்சநீதிமன்றத் தீர்ப்பை அப்படியே ஏற்பது நாட்டுக்கும் அரசியல் ஆரோக்கியத்துக்கும் உகந்தது. கிருமி, இந்த அரசியல் பிடிவாதம்தானே தவிர, உச்சநீதிமன்றத் தீர்ப்பு அல்ல.

● யூ.பைஸ் அஹ்மத், நாமக்கல்

? தாழ்த்தப்பட்டவர் குடியிருப்புக்குச் சென்று வந்த ராகுல் காந்திக்குப் பரிகாரச் சடங்குகள் நடத்தப்பட்டன என்று மாயாவதி குற்றம் சாட்டுகிறாரே?

! சுதந்திர இந்தியாவில், ஓர் அரசியல் தலைவர் மற்றொரு அரசியல் தலைவரைப் பார்த்து இப்படிக் கீழ்த்தரமாகப் பேசுவது சகஜமாகியிருக்கிறது. மாயாவதியின் ஸ்டேட்மென்ட் தீண்டாமை குற்றத்துக்கு நிகரான அபவாத செயல்.

● கே.எல்.கந்தரூபி, எம்.கே.புல்கூர்

? 'சினிமாவுக்காக என் வாழ்க்கையைத் தியாகம் செய்யப் போகிறேன்' என்கிறாரே எஸ்.ஜே.சூர்யா?

! அவர் பங்கேற்கும் படங்கள், மக்களைக் கவர்ந்து அவர்களுக்கு நல்லது செய்யும் சினிமாவாக இருப்பது ரொம்ப முக்கியம். இல்லாவிட்டால், ரசிகர்கள்

எஸ்.ஜே.சூர்யாவை சந்தோஷமாகத் 'தியாகம்' செய்ய ஆரம்பித்துவிடுவார்கள்.

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

**? சீனாவில் நடைபெறும் ஒலிம்பிக் போட்டிகளை எந்தெந்த நாடுகள் புறக்கணிக்கும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?**

! முழுமையாகப் புறக்கணிக்காவிட்டாலும் ஆரம்ப விழாவையேனும் புறக்கணிக்க வேண்டும். - இந்தக் குரல் உலகெங்கும் எழுந்துள்ளது. பல்வேறு நாடுகளின் பிரபலங்கள், முக்கியஸ்தர்கள் இந்தக் கோரிக்கையைத் தங்கள் அரசிடம் எழுப்பியிருப்பதே திபெத்திய விடுதலை இயக்கத்துக்கு மிகப் பெரிய வெற்றிதான்.

● என்.சீத்தாலட்சுமி, சென்னை - 40

**? 'கோதுமை விலை உயர்வுக்கு, தென் மாநில மக்கள் சப்பாத்தி அதிகம் சாப்பிடுவதே காரணம்' என்று சரத் பவார் சொல்லியிருப்பது சிரிப்பாக இல்லை?**

! சிரிப்புதான்; கோபச் சிரிப்பு! அரிசி விலையும்தான் அதிகரித்து வருகிறது! 'வடநாட்டவர் அரிசிச் சோறு சாப்பிட ஆரம்பித்துவிட்டார்கள் என்பதே காரணம்; பருப்பு விலை உயர்வுக்கு, எல்லோரும் இட்லி - சாம்பாரை விரும்பிச் சாப்பிடுவதே காரணம்' என்று விளக்கமளிப்பாரா? முதிர்ந்த அரசியல்வாதி பவாரிடம், இவ்வளவு அபத்தமான சாக்குபோக்கை நாம் எதிர்பார்க்கவில்லை.

❑ ரூ.100/- பரிசு பெறுபவர் :

ச. நாகரத்தினம், திருப்பூர்

✱ அக்கிரம அல்வா!



● எஸ்.சந்திரிகா ஷண்முகம், சென்னை - 12 ★

**? ராமதாஸ் உண்மையிலேயே யார் பக்கம் சாய்கிறார் என்று தெரியவில்லையே?**

! பிரச்னைகளின் அடிப்படையில் தமது நிலைப்பாடு பக்கம் சாய்கிறார். அதனால்தான் 'கிரீமி லேயர்' விவகாரத்தில் தி.மு.க. பக்கம் இருக்கிறார்!

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? ஒக்கேனக்கல் கூட்டுக் குடிநீர் திட்ட விவகாரத்தில், காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தி எந்த வகையிலும் தலையிடவில்லை என்று பத்திரிகைத் தொடர்பாளர் மொய்லி பேசியிருப்பது, முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கும் செயல்தானே?**

! ஊஹூம்... அந்தப் பூசணியை நன்றாக அல்வா கிளறி வாயில் அடைக்கும் அக்கிரமம்!

● ச.நாகரத்தினம், திருப்பூர் ❑

**? அம்மா, பிள்ளைகளை சித்திரா பௌர்ணமியில் விளக்கேற்ற வேண்டுகோள் விடுத்துள்ளாரே? (அருஞ்சொற்பொருள்: அம்மா - ஜெ; பிள்ளைகள் - அ.தி.மு.க. தொண்டர்கள்)**

! தொண்டர்கள் தமக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்! பிரார்த்தனையைக்கூட ஆணையாக்கும் கலை, அ.தி.மு.க. தலைவருக்கு மட்டுமே கைவந்தது!

✱ விளக்கேற்ற ஆணை!



✱ ரூ.50/- பரிசு பெறுபவர் :

எஸ்.சந்திரிகா ஷண்முகம், சென்னை - 12

# நதியின் மரணம்




***ஒரு வண்ணத்துப் பூச்சியின் மரண சாசனம்... - சி.மகேந்திரன், விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 2. விலை ரூ.140/-***

நதியின் மரணம் பற்றிய விழிப்புணர்வுக் கட்டுரைகள். நதிநீர் அடையும் ஒவ்வொரு துயரையும் மனக் கொந்தளிப்புடன் விவரித்துள்ளார் நூலாசிரியர். இந்நிலை தொடர்ந்தால் மனிதகுலம் அழியும் என்று இந்நூல் எச்சரிக்கிறது. நீராதாரங்களில் வாழ்ந்த மக்கள், அவர்களின் பண்பாடு, சரித்திரக் கதைகள், கடலில் மூழ்கிப் போன நதிகள் போன்ற பல அரிய தகவல்களைச் சான்றுகளுடன் அளித்துள்ளார். புகைப் படங்களும் ஓவியங்களும் நூலுக்குக் கூடுதல் சிறப்பு.




***டயானா - ஒரு 'தேவதை'க் கதை - ச.ந.கண்ணன், கிழக்கு, 33/15, எல்டாம்ஸ் ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை - 18. விலை ரூ.70/-***

இங்கிலாந்து இளவரசி டயானாவின் வாழ்க்கை வரலாறு. அவரின் நற்குணங்கள், காதல் திருமண வாழ்க்கை, அவருக்கு ஏற்பட்ட மன அழுத்தங்கள், பிரச்னைகளை எதிர்கொண்டது, பொது வாழ்வில் ஈடுபட்டது, மரணம் வரை துரத்திய மீடியா என அத்தனை நிகழ்வுகளையும் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் நூலாசிரியர்.




***தெய்வங்களின் வடிவங்கள் - சுவாமி ஹர்ஷானந்தர்; தமிழில்: திருமதி சக்தி கிருபாகரன், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை - 4.விலை ரூ.40/-***

Hindu Gods and Goddesses என்ற ஆங்கில நூலின் தமிழ் வடிவம். இந்து சமயத்தில் கடவுள் கொள்கை, தெய்வங்கள் பற்றிய பொதுக் குறிப்புகள், வேதகால வடிவங்கள், மும்மூர்த்திகள், சக்தி இறை ஆற்றல் என தெய்வ வடிவங்களின் பண்புகளையும் விளக்கங்களையும் கொண்ட நூல்.




***காற்றின் விரல்கள - அமுதன், வ.உ.சி.நூலகம், ஜி-1, வாயிட்ஸ் காலனி, இராயப்பேட்டை, சென்னை - 14. விலை ரூ.30/-***

ஹைகூ கவிதைகளின் தொகுப்பு. இயற்கை அழகோடு சமூக நிலையையும் விமர்சித்துப் படைத்துள்ளார் நூலாசிரியர். கவிதைகளுக்கேற்ற சித்திரங்களை இணைத்திருக்கலாம்.

**- மித்ரா**



# வெப்பம்...



கோடை வந்தேவிட்டது. நமது உடலைப் பாதுகாக்க, முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் குறித்து சித்த மருத்துவ நிபுணரான டாக்டர் வேல்விழியிடம் பேசினோம்...

''வெயில் காலம் தன்னோடு பல இன்னல்களையும் இணைத்தே மக்களிடம் வந்து சேர்கிறது. பல அசௌகரியங்கள் வெப்பத்தால் ஏற்படுகின்றன. எளிமையான சில விஷயங்களைக் கையாள்வதன் மூலம் வெப்பத்தின் தாக்குதலிலிருந்து நம்மைக் காக்கவும் மீட்கவும் முடியும்.

தண்ணீரிலிருந்துதான் பல பிரச்னைகள் ஆரம்பிக்கின்றன என்பது எத்தனை பேருக்குத் தெரியும்? வெயிலில் அலைந்துவிட்டு வந்து கோடை வாட்டுகிறதே என்று 'ஜில்' நீரைக் குடித்தால், முடிந்தது கதை! உடனே ஜலதோஷம் பிடித்துவிடும். ஆனால், அதே நேரத்தில் 'ஜில்' இல்லாத தண்ணீரை கோடை காலத்தில் மிக அதிகமாக அருந்த வேண்டும். வெப்பத்தை இது தணிப்பதோடு, உடலில் உள்ள அழுக்குகளை, சிறுநீர் மூலம் வெளியேற்றி உடலைத் தூய்மைப்படுத்துகிறது. வெட்டி வேரைக் குடிநீரில் ஊற வைத்து, அத் தண்ணீரை அருந்தினால் கோடையில் உடலில் வீசும் துர்நாற்றம் போய்விடும். வியர்க்குரு, வேனல் கட்டிகளும் எட்டிப் பார்க்காது. பழங்கள், காய்கறிகளை அதிகளவில் சேர்த்துக்கொள்ள வேண்டும். கரும்புச் சாறு, தர்பூசணி ஜூஸ் அதிக பலனைத் தரும். வெள்ளரி, நுங்கு, வெந்தயக் கீரையும் வெயிலுக்கு ஏற்றவைதான்.

அல்சர், பி.பி., இதய நோய்கள், கிட்னி பாதிப்புகள், பைல்ஸ், மனநோய் எனப் பல பிரச்னைகளுக்கு வெப்பத்தினால் ஏற்படும் பித்தமே காரணமாக இருக்கிறது. எனவே வெப்பத்தை உடலில் தங்கவிட்டால் ஆபத்துதான். ஒரு லிட்டர் தண்ணீரில் ஒரு ஸ்பூன் சீரகம், ஒரு ஸ்பூன் தனியா சேர்த்துக் கொதிக்கவைத்து வடிகட்டி, காலையிலும் மாலையிலும் குடித்து வர, வெப்பம் மட்டுப்படும். கோடை காலத்தில் இரவில் தூக்கம் வரவில்லையென்றால் விளக்கெண்ணெய் இரண்டு சொட்டு உள்ளங்கையில் ஊற்றி, பரபரவென்று இரண்டு கைகளையும் தேய்க்க வேண்டும். உடலில் உள்ள வெப்பம் வெளியாகிவிட, அடுத்த பத்து நிமிடத்தில் தூக்கம் உங்கள் கண்களைத் தழுவும்.

கோடையில் உப்பு, புளிப்பு, காரத்தைக் குறைத்துவிட வேண்டும். ஊறுகாய், அப்பளம், வத்தக் குழம்பு, காரக் குழம்பு போன்றவற்றைத் தவிர்த்துவிட வேண்டும். வாழைத் தண்டு, வாழைப்பூ, முள்ளங்கி போன்றவற்றை வாரத்துக்கு மூன்று முறை கண்டிப்பாகச் சேர்க்க வேண்டும். இவற்றுக்கு நீர் பெருக்கும் தன்மை உள்ளதால், வெப்ப காலத்தின் மிகச் சிறந்த உணவு. மூலம், அல்சர் இருப்போருக்கு இந்தக் காலத்தில் நெஞ்செரிச்சல் அதிகமாக இருக்கும். அவர்கள் ஒரு டம்ளர் தண்ணீரில் ஒரு ஸ்பூன் வெந்தயப் பவுடர் கலந்து வெறும் வயிற்றில் அருந்த, எரிச்சல்

# பித்தம்... மனநோய்..!



குறைந்துவிடும். இது கிட்னியில் உருவாகும் கற்கள், பெண்களுக்கு ஏற்படும் வெள்ளைப்படுதல் தொல்லை போன்றவற்றுக்கும் நல்லது.

கோடையில் குளிப்பதற்கு மூலிகை குளியல் பவுடரை உபயோகித்தால் உடல் வறட்சி, துர்நாற்றம், கரும் திட்டுகள், முகப்பரு எல்லாம் தடுக்கப்படும். வெட்டிவேர், ஆவாரம் பூ, கஸ்தூரி மஞ்சள், உலர்ந்த ரோஜா இதழ், சந்தனம், விளாம்பிச்சு, கிச்சிலிக் கிழங்கு, கார்போக அரிசி எல்லாவற்றையும் காய வைத்து அரைத்துப் பொடியாக்கி உருவாக்கப்படுவதே, இந்த மூலிகை குளியல் பவுடர்.

இந்தக் காலங்களில் பருத்தி உடைகளை அணிவதே நல்லது. ஜீன்ஸுக்குத் தடா போடுங்கள். வேர்க்கடலை, கொண்டைக் கடலை, மொச்சை, காராமணியை கொஞ்ச நாட்களுக்குத் தள்ளி வைக்கலாம். இவை பித்தத்தை அதிகப்படுத்தி, வெப்பத்தை உடலில் அதிகப்படுத்துவதால் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும். பலாப் பழம், சீதாப்பழம், பாகற்காயும் கூடாது. மாதுளம், பப்பாளி, கேரட்டை அதிகம் சேர்த்துக்கொள்ளலாம். பெண்கள் அழகுக்கென உபயோகிக்கும் கண் மை, மருதாணி போன்றவை உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும். மல்லிப் பூ கோடையில்தான் அதிகம் கிடைக்கும். காரணம், அதனைச் சூடுவதால் உடலுக்கு ஏற்படும் குளிர்ச்சிதான்.

நம் பழக்க வழக்கங்களைப் பொறுத்தே எந்த ஒரு பருவமும் வரத்தையும் சாபத்தையும் நமக்கு அளிக்கிறது. அதனால் கோடையில் உடலைக் குளிர்விப்பது ஒன்றும் பெரிய காரியமல்ல. எல்லாம் நம் கையில்தான் இருக்கிறது'' என்று கூறும் டாக்டர் வேல்விழி, ''கோடையை இதமாக்க இந்தக் குறிப்புகளைப் பயன்படுத்தும்போது, குளிர்ச்சியான உடல்வாகுள்ளவர்கள் கவனமாக இருக்க வேண்டும். சைனஸ், ஆஸ்துமா பிரச்னை உள்ளவர்கள் இவற்றுள் எதையும் மேற்கொள்ளாமல் இருப்பதே நல்லது'' என்கிறார்.

– மதுமிதா



* வேல்விழி

# தோழா

நண்பர்களுக்காக வாழும் நண்பனின் கதை. அநாதை, காதல் தோல்வினு நித்தின் சத்யாவோட நடிப்பு யதார்த்தம். பிரேம்ஜி அமரனோட நடிப்பு காமெடி கலாட்டா. அஜய்ராஜ் ஆக்‌ஷனில் அசத்துகிறார். விஜய் வசந்த் காதல் சுவாரஸ்யமான பொழுதுபோக்கு. சசி, வெண்ணிராடை மூர்த்தி, டெல்லி குமார்னு நடிகர் பட்டாளமே இருக்கிறது படத்துக்குக் கூடுதல் சப்போர்ட். நாலு நண்பர்களுக்கும் நாலு காதலிகள். சாகித்யா, லிக்‌ஷனா, ஜெனிபர், சௌமியானு நடிச்சிருந்தாலும், போனஸா பாபிலோனா, சுஜானு ஒரு பக்கம் லேடி ஆர்ட்டிஸ்ட் கூட்டம். எல்லோருக்கும் காதல்பாட்டுக்குக் குத்தாட்டம் போடுற வேலைதான்! 'ஒரு நாயகன் உதயமாகி றான்'னு ரீமிக்ஸ் பாட்டு கொஞ்ச நாளைக்கு இளசுகளை விரட்டும்.

நாலு நண்பர்களோட லட்சியம், அதுக்கு ஏத்த மாதிரி முயற்சினு எதுவுமே வலுவா இல்லாதது திரைக்கதை ஓட்டத் தைக் குறைச்சுடுது.

கருத்துச் சொல்றமுன்னு விஷயத்தை முழுசாச் சொல்லாம முடிக்கிறது ஏமாற் றத்தை ஏற்படுத்துது. கங்கை அமரன், சினேகன் பாடல் வரிகளுக்கு பிரேம்ஜி அமரனோட இசை கேட்க இனிமை. தனு வோட ஒளிப்பதிவு பார்க்க குளுமை. புதுமையா சொல்லணுமுனு, இல்லாம தைரியமா நட்புக்கு அர்த்தம் கொடுத்த இயக்குநர் சுந்தரேஸ்வரனை மனதாரப் பாராட்டலாம். 'தோழா' சும்மா டைம் பாஸுக்காகச் சேர்ந்து படம் பார்க்கும் நண்பர்களுக்கு மட்டும்.

– முத்து



# மங்கையர் மலரின்

# திருமண மலர்

## திருமண மலர் விளம்பரக் கட்டண விவரங்கள்

முதல் முப்பது வார்த்தைகளுக்கு ரூ. 500/-

30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா ரூ. 15/-

வண்ணத்தில் ஹைலைட் செய்ய கூடுதல் கட்டணம் ரூ. 100/-

1" X 1" அளவில் வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ. 800/- (அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ 15/-)



வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க **Profile** விளம்பரம் ரூ. 2500/-



வண்ணப் புகைப்படம் அனுப்புபவர்கள், தெளிவான புகைப்படமாக, பாஸ்போர்ட் அளவில் இரண்டு பிரதிகள் அனுப்பவும். புகைப்படங்களை திருப்பி அனுப்ப இயலாது.

கட்டணத்தை நேரில் ரொக்கமாகவோ அல்லது சென்னை செக்காகவோ, வெளியூர் டிமாண்ட் டிராப்டாகவோ, மங்கையர் மலர் என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

## மங்கையர் மலரின் திருமண மலர்

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.